# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை




சிலம்பு-சக] வள்ளுவர் ஆண்டு உ00ரு, புரட்டாசி (Oct. '74)[பரல்-உ

## 'செந்தமிழ்ச் செல்வி'

### இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---

செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு சசு | திருவள்ளுவர் ஆண்டு உ００ரு, புரட்டாசி அக்டோபர் 1974 | பரல் ட |
|---|---|---|

# இந்தி எதிர்ப்பியக்கம்

## கழகம் நிறுவிய அமைச்சர் திருவரங்கனுரும் சென்னைக் கிளைநிலைய முகவரும் இப்போதைய ஆட்சியாளருமாகிய சுப்பையாவும் தொடக்கமுதல் செய்த தொண்டுகள்

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (மட்டிட்டது) 1920 செப்டம்பரில் தமிழ், சைவம் இரண்டின் வளர்ச்சியின் பொருட்டுப் பதிவு செய்யப்பெற்றது. புத்தகங்களை அச்சிட்டு அவற்றின் விற்பனையினுல் செலவு நீக்கிக் கிடைக்கப்பெறும் ஊதியத்தில் நேர்பாதி அதன் அறநிலையங்களாகிய தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்கும், தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்திற்கும் வழங்கப்பெறுகின்றது.

பேராய கட்சியின் சார்பில் மதிப்புக்குரிய சி. இராசகோபாலாச்சாரியார் 1936இல் வேட்பாளராக நின்று தாம் 1937இல் தேர்ந்தெடுக்கப் பெற்றுல் தமிழ்நாட்டுப் பள்ளிகளில் வடநாட்டு இந்தி மொழியைக் கட்டாயப்பாடமாக வைக்கப் போவதாகப் பேசிவந்தனர்.

உடனே யான் தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்தின் வாயிலாக

"தமிழ் நாட்டுக்கு இந்தி வேண்டுமா ?"

என்ற தலைப்பில் ஓர் அறிக்கையினை 23-11-1936இல் அச்சிட்டுத் திரு இராசகோபாலாச்சாரியாரவர்கட்கும் மற்றும் அறிஞர்

கட்கும் அனுப்பி அவரவர்களுடைய கருத்துரைகளை எழுதி யனுப்புமாறு வேண்டினேன். அவ்வறிக்கையுடன் "இந்தி மொழிப் பயிற்சியா?" என்ற தலைப்பில் கோவை தி. சு. நடராச பிள்ளை, பி.ஏ., எல்.டி. எழுதிய கட்டுரையினையும், 'தமிழும் இந்தியும்' என்ற தலைப்பில் கருவூர் ஈழத்துச் சிவானந்த அடிகள் எழுதிய கட்டுரையினையும் அனுப்பிவைத்தேன்.

அறிக்கையின் ஒரு பகுதி மட்டும் அடியிற் காண்க :

> "இந்தியைத் தமிழ்நாடு கட்டாயப் பாடமாக ஏற்கலாமா? அதனால் தமிழ்மொழிக்கு நன்மை ஏற்படுமா? அல்லது தீமை ஏற்படுமா? என்பவற்றைப் பற்றித் தங்கள் உள்ளக் கருத்தினைச் சில வரிகளில் எழுதி இது கிடைக்கப்பெற்ற ஒரு கிழமைக்குள் தவறாமல் அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறோம். இது தமிழன்னைக்குக் காலத்தினாற் செய்த உதவியாகும். அறிஞர் கருத்துக்களை யெல்லாந் திரட்டி ஒரு புத்தகமாக வெளியிடக் கருதுகிறோம்"
>
> —தென்னிந்திய தமிழ்ச் சங்கத்தார்.

முதன்முதல் திரு. இராசகோபாலாச்சாரியாரவர்களிட மிருந்து 26-11-36இல் எழுதப்பெற்ற கடிதம் 29-11-36இல் கிடைக்கப் பெற்றது. அதனை அப்படியே கீழே தருகின்றேன்.

> "தங்கள் சுற்றுக் கடிதம் 23—11—36 தேதி கொண்டது வரப்பெற்றேன்.
>
> இந்த விஷயத்தை நான் நன்கு ஆராய்ந்து பெற்ற முடிவு என்னவென்றால் தமிழ் மக்களும் தமிழ் மொழியும் இந்திய நாட்டின் வருங்கால நடவடிக்கைகளில் முன்னேற்றமும் நியாயமான இடமும் பெறவேண்டியதற்குத் தமிழ் மக்கள் கற்கும் கல்வி முறையில் ஹிந்தி பாஷையைச் சாதாரணமாகப் பேசவும் எழுதவும் கற்பது ஒரு இன்றியமையாத பகுதியாக இருக்க வேண்டும்.
>
> இதைச் செய்யாதவரையில் தமிழ்மக்கள் தாங்கள் அடைய வேண்டிய உரிமைகளைச் சரிவர அடையமாட்டார்கள். ஆகவே தமிழ்மொழியும் இந்தியாவில் அது பெறவேண்டிய கௌரவத்தைப் பெறத் தடையுமாகும்.
>
> நான் குறிப்பிட்டிருக்கிற அளவு ஹிந்தியில் சம்பாஷணை செய்யவும் எழுதவும் கற்பது கடினமாகாது. கல்வி முறையில் தாய்பாஷையே முதல் ஸ்தானம் பெற்று எல்லாப் படிப்பும் அதைக்கொண்டே சொல்லித்தரவேண்டும். ஹிந்தி ஒரு இரண்டாம் பாஷையாகத்தான் சொல்லித்தரவேண்டும்.
>
> இவ்வாறு ஹிந்தி கட்டாயப் பாடமாவதில் தமிழுக்கு ஒருவித தீமையும் ஏற்படாது. நன்மையே உண்டாகும். தமிழர் இந்தியா முழுதும் கௌரவமும், தொழிலும்,

சவுகரியமும் பெற வழி உண்டாகி, நாட்டுக்கும் நாட்டின் தாய் மொழிக்கும் நன்மையே உண்டாகும். தாங்கள் அனுப்பியிருக்கும் கடிதத்தையும் அடக்கம் செய்துள்ள வெளியீடுகளையும் படித்து அவைகளில் இந்த விஷயத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிற அபிப்ராயத்தைக் கண்டு மிகவும் வருந்துகின்றேன். சங்கம் இம்மாதிரியான பிற்போக்கான அபிப்பிராயத்தை அங்கீகாரம் செய்யாதென்றே நம்புகிறேன். ஹிந்தியைக் கண்டு தமிழுக்கு எள்ளளவு பயமும் வேண்டாம்.

கோடிக்கணக்கான ஜனங்களுக்கு ஹிந்தி தாய்பாஷை. அவர்களுடன் நாம் நெருங்கி வாழவேண்டும். அவர்கள் அயலார்களாயிருந்தாலுங்கூட இந்த முடிவு சரியே யாகும். ஆனால் அவர்கள் அயலார்கள் அல்ல. அவர்களும் நாமும் சேர்ந்து ஒரு சமூகம், ஒரு வரலாறு, ஒரு நாடு, ஒரு வருங்காலத்திய யோக க்ஷேமம் இவைகளில் பங்கு கொண்டு வாழ வேண்டும்.

ஆங்கிலமும் கல்வி கற்கும் தமிழ்மக்கள் அனைவரும் படிக்க வேண்டும். ஆனால் அது எல்லாப் படிப்புக்கும் பொது வாயிலாக இருப்பது தவறு. ஆங்கிலமும் ஹிந்தியும் இரண்டும் தாய்பாஷைக்கு அடுத்தபடி தமிழ்மக்கள் கற்க வேண்டியது அவசியம்.

(ஒ-ம்) இராஜகோபாலாச்சாரி.

இதனையடுத்து அண்ணாமலைப் பல்கலைக்கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் நாவலர் சோமசுந்தர பாரதியார், எம்.ஏ., பி.எல்., புதுவை தவத்திரு சுத்தானந்த பாரதியார், சென்னை வித்துவான் மா. இராசமாணிக்கனார், பி. ஓ. எல்., குடந்தைத் தமிழாசிரியர் ஊ. சா. வெங்கட்ராமையர், பண்டிதை கிருஷ்ண வேணியம்மை, கலிங்கத்துப்பரணி உரையாசிரியர் ஆ. வீ. கன்னைய நாயுடு, சேலம் ஆசிரியர் அ. வரதநஞ்சைய பிள்ளை, குளித்தலை கம்பர் செந்தமிழ்ச் சங்கச் செயலர், சேலம் தமிழாசிரியர் லா. கோ. வேணுகோபால் நாயுடு, கடந்தைத் தமிழ்ச் சங்கச் செயலர் வித்துவான் இ. சிவகுருநாதன், குடந்தை சொ, லிங்கேசுவரன், பேங்களூர் தமிழ்ப் பேராசிரியர் டி, எம். முகையதீன் கவிராயர் முதலியோர் இந்தி புகுத்தப்பட்டால் தாய்மொழியாம் தமிழ்மொழிக்குப் பெருங்கேடு விளையும் என விளக்கி எழுதியுள்ளனர்.

## இந்தி பொது மொழியா ?

யானும் கழகப் பங்காளியும், பாகனேரி தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத் தலைவரும் தமிழ்த் தொண்டருமாகிய திருவாளர் மு. காசிவிசுவநாதன் செட்டியாரும் பல்லாவரம் தனித்தமிழ்த் தந்தை மறைத்திரு மறைமலையடிகளாரைக் கண்டு எனது அறிக்கையினையும் திரு. இராசகோபாலாச்சாரியார் எழுதிய மறுமொழிக்

கடிதத்தையும் காட்டினோம். அவற்றைக் கண்ணுற்ற அடிகளார் ‘இந்தி பொது மொழியா?’ என்ற தலைப்பில் $8\frac{1}{2}$’/5’ அளவில் 24 பக்கங்களில் (1) பழைய நாகரிக மொழிகள் (2) தமிழும் புது மொழிகளும் (3) இந்தியர் தாய் மொழி கல்லாதவர் (4) ஆங்கிலம் போல் இந்தியும் அயல் மொழியே (5) இந்தி பொது மொழியன்று (6) இந்தி மொழி வரலாறு (7) இந்திமொழி நூல்கள் (8) தமிழைப் பொது மொழியாக்குதலின் நன்மை, (9) தமிழ் அல்லாத மொழிகள் வறியன புதியன, (10) தமிழ் பொதுமொழியாகாத காரணம் (11) ஆங்கிலமே பொதுமொழியாதற்குரியது என்னும் பதினொரு தலைப்புக்களில் இந்தி மொழி கட்டாயப் பாடமாக வைக்கப்பெறின் தமிழ்மக்கட்குப் பெருங்கேடு விளையும் என்பதைத் தெள்ளத் தெளிய விளக்கியுள்ளார்கள். மேலும் மொழி பற்றிய நூல்களையெல்லாம் ஆய்ந்து இந்தியாவுக்கு ஆங்கிலமே பொதுமொழியாதற்கு எல்லா வகையானும் தகுதியுடையது என்பதை நிலைநாட்டியுள்ளார்கள். இந்நூல் இறுதியில் அடிகள் எழுதியுள்ள பகுதியினை அடியிற்கண்டு உண்மையுணர்மின்கள்.



“அரசியற்றுறையில் நம் இந்து மக்களை முன்னேற்றி வருவதும், தம்முரிமைகளைக் கண்டு கேட்க அவர்கட்குக் கண் திறப்பத்ததும், இவ்விந்திய நாடெங்கணும் பெரும்பொருட் செலவாற் பலகோடி மக்களாற் பயிலப்பட்டு இயற்கையே பொதுமொழியாய்ப் பரவி வருவதும் இலக்கண இலக்கியத் துறைகளிலும் நடுநிலை குன்றா உண்மைகாண் வகைகளிலும் பன்னூறாயிரக் கணக்கான நூல்கள் புதிய புதியவாய்ப் பெருகும் அறிவுப் பெருஞ் செல்வம் வளரப் பெறுவதுமான ஆங்கிலமொழியை, எல்லா மொழிகளிலும் உள்ள எல்லாச் சிறந்த நூல்களையுந் தன்கண் மொழிபெயர்த்து வைத்து அவற்றின் பொருளை அவை வேண்டுவார்க்கு எளிதின் ஊட்டுந் தனிப்பெருஞ் சிறப்புவாய்ந்த ஆங்கில மொழியை நம்மனோர்க்குப் பொது மொழியாக்காமல், இந் நலங்களில் ஒரு கடுகளவு தானும் இல்லா இந்தி மொழியைப் பொதுமொழி யாக்க முயலல் அறிவுடையார் செயலாகுமா? ஆகாதே, ஆதலால், நந்தமிழ் நாட்டவர் ஆங்கிலத்தையுந் தமிழையும் நன்கு பயின்று நலம் பெறுவாராக!”

மேலும் யாங்கள் வேண்டிக்கொண்டதற்கிசைந்து அடிகளார்

"இந்திமொழிப் பயிற்சி ஏற்புடைத்தாமா"

என்ற தலைப்பில் ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்றையும் 8 பக்க அளவில் எழுதித் தந்தனர். அதனைச் செந்தமிழ்ச் செல்வியில் வெளியிட்டதோடு தனியேயும் 10,000 படிகள் அச்சிட்டுப் பரப்பப்பட்டன. இவ்விரண்டுமே இந்தி எதிர்ப்பு இயக்கக் கூட்டங்களிற் பேசுவார்க்குச் சிறந்த கருத்துக்களைத் தந்துதவின என்று சொன்னால் அது மிகையாகாது.

கருவூரிலிருந்த ஈழத்துச் சிவானந்த அடிகள் 'இந்தி பொதுமொழியா'? என்ற நூலை மறைத்திரு மறைமலையடிகளாரிடம் இசைவு பெருமலே 15,000 படிகளை அச்சிட்டுத் தமிழ் அறிஞர்கட்கும், பள்ளிகளின் தலைமையாசிரியர்கட்கும், கல்லூரிகளின் முதல்வர்கட்கும் தமிழ்ச் சங்கங்களுக்கும் விலையின்றி அனுப்பி வைத்தனர். அதனை அச்சிடுதற்கு வேண்டிய தாள்கட்டுக்களை இப்போதைய கழகத் தலைவர் பாகனேரி திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்கள் தமது கணக்கில் வாங்கிக் கொடுக்கும்படி எனக்குத் தெரிவித்தனர். மறைத்திரு மறைமலையடிகளார் தம்மைக் கேட்காமலே தமது நூலை அச்சிட்டதுபற்றி முதற்கண் வருந்தினர்களாயினும் பின்னர் அதனுல் ஏற்படக் கூடிய மிகுபயனை நோக்கி அமைதியுற்றனர். ஈழத்துச் சிவானந்த அடிகளும் அடிகளார்க்குத் தாம் அதனை அச்சிட வேண்டிய முதன்மையினை எடுத்துக்கூறி மன்னிக்குமாறு கடிதம் எழுதினர்.



**தமிழ்ப் பாதுகாப்புக் கழகம், சென்னை.**

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (மட்டிட்டது) தமிழ், சைவம் இவற்றை வளர்க்கும் பொருட்டு நிறுவப்பட்ட கூட்டுப்பங்கு நிறுவனமாகும். எனவே அது நேராக அரசியலில் ஈடுபடுவதற்கில்லை. எனவே சென்னையில் எனது சொந்தப் பொறுப்பில் 1937இல் 'தமிழுக்கு இந்தி

மொழியினால் ஊறு ஏற்படுவதைத் தடுக்கும்பொருட்டும் மறைமலையடிகளாருடைய தனித்தமிழ்க் கொள்கையினைப் பரப்பும்பொருட்டும், தமிழகத்திலே பார்ப்பனர்கள் தமிழ் மொழிக்கும், தமிழர் பண்புக்கும் செய்த, செய்துவரும் தீங்குகளை வெளிப்படுத்தும்பொருட்டும் பவழக்காரத்தெரு 156ஆம் எண் கட்டிடத்தில் 'தமிழ்ப் பாதுகாப்புக் கழகம்' என்ற நிறுவனம் அமைக்கப் பெற்றது. அதேபோல் கழகத்தை நிறுவிய அமைச்சரும், என் அருமைத் தமையனாரும், மறைமலையடிகளார் திருமகள் செந்தமிழ்த் திருவாட்டி நீலாம்பிகையம்மையாரை மணந்தவருமாகிய திருவாளர் திருவரங்கனார் அவர்கள் நெல்லையில் தமது சொந்தப் பொறுப்பில் 'தமிழ்ப் பாதுகாப்புச் சங்கம்' என்ற பெயரில் நிறுவனம் ஒன்றை அமைத்தனர்.

**தமிழகத்தில் காங்கிரசு ஆட்சி :**

1937 சூலைத் திங்களில் மதிப்பிற்குரிய சி. இராசகோபாலாச்சாரியார் தலைமையில் காங்கிரசு ஆட்சி அமைந்தது. மதிப்பிற்குரிய டி. பிரகாசம், வி. வி. கிரி, டாக்டர் ப. சுப்பராயன், டாக்டர் டி. எஸ். எஸ். இராசன், எஸ். இராமநாதன் முதலியோர் அமைச்சர்களாயினர். முதலமைச்சர் மதிப்பிற்குரிய சி. இராசகோபாலாச்சாரியார் அவர்கள் 10—8—1937இல் தியாகராயநகர் இந்தி பிரசார சபையில் இந்திமொழியைப் பள்ளிகளில் கட்டாயமாக்கப்போவது உறுதி என்று பேசினர். எனவே இந்தி எதிர்ப்பியக்கக் கிளர்ச்சியும் வலிவுறத் தொடங்கலாயிற்று.

**இந்தி ஒழிக ! தமிழ் வாழ்க !**

36'/9' அளவுள்ள வெள்ளைத்தாளில் 'இந்தி ஒழிக, தமிழ் வாழ்க' என்ற தொடர்களைப் பெரிய எழுத்துக் (Poster types) களில் ஆயிரக்கணக்கில் அச்சிட்டுச் சென்னையில் முக்கியமான இடங்களிலெல்லாம் ஒட்டச் செய்தேன். அவற்றை அட்டைகளிலும் தட்டிகளிலும் ஒட்டிக் கொம்புகளில் அமைத்துத் தொண்டர்கள் கையில் ஏந்திக் கொண்டு 28—11—1937இல் காஞ்சி மணிமொழியார் வாழ்ந்த பவழக்காரத்தெரு 147ஆம் எண் இல்லத்திலிருந்து முதல் ஊர்வலம் பேராசிரியர் கா. சுப்பிரமணியபிள்ளை எம்.ஏ., எம்.எல் அவர்கள் தலைமையில் தொடங்கப் பெற்றது. ஊர்வலத்தில் பேராசிரியர் மோசூர் கந்தசாமி முதலியார், வழக்குரைஞர் T. S. நடராச பிள்ளை முதலியோர் கலந்து கொண்டனர். 4 பேர் வரிசைகொண்டு இரண்டு பர்லாங் அளவில் கூட்டம் அமைந்தது. 'இந்தி ஒழிக! 'தமிழ் வாழ்க,' 'இந்தியைக் கட்டாயப் பாடமாக்க விடமாட்டோம்'

என்று முழங்கிக்கொண்டே கூட்டம் வடபக்கமாகச் சென்று பின் தம்புச்செட்டித்தெரு, எஸ்பிளனேட், கடற்கரைச்சாலை வழியாக திருவல்லிக்கேணி கடற்கரை சென்று முடிவுபெற்றது. வழிகளில் பார்ப்பனர் வீடுகளின் மாடியிலிருந்து அழுகின கத்தரிக்காய், தக்காளி முதலிய பொருள்கள் கூட்டத்தினரின் மேல் வீசப்பட்டன. சென்னையில் இதுவே பெருங் கிளர்ச்சி யோடு உணர்ச்சி பெருக நடைபெற்ற முதல் ஊர்வலமாகும்.

### இந்தி எதிர்ப்பு இயக்கமும் பார்ப்பனரும்

இந்தி மொழி சம்ஸ்கிருதச் சொற்களைப் பெரும்பாலும் கொண்டது. இந்தி மொழியினைக் கற்பதால் சம்ஸ்கிருத மொழிக்குச் செல்வாக்குப் பெருகும் என்பதும் தம் இனத்த வர்க்கு வேலை வாய்ப்பு மேலும் ஏற்படும் என்பதும் தனித்தியங்க வல்ல தமிழ் மொழிக்குள்ள ஆக்கத்தைக் குறைக்க வேண்டு மென்பதுமே கருதிப் பார்ப்பனர் இந்தி கட்டாயப் பாடத்தை ஆதரித்தனர். ஆகவே பார்ப்பனர்களில் ஆடவரும் பெண்டிரும் அகவை முதிர்ந்தோரும் இந்தி மொழியைக் கற்பாராயினர். பார்ப்பன இதழ்களும் இந்தி கட்டாயப் பாடத் திட்டத்தை ஆதரித்தன.

மாவட்டங்களில் பல ஊர்களிலும் இந்தி எதிர்ப்புக் கூட்டங்கள் நடைபெற்றன. 26—12—1937இல் திருச்சி தேவர் மன்றத்தில் நாவலர் சோமசுந்தர பாரதியார் தலைமை யில் இந்தி எதிர்ப்பு மாநாடு நடைபெற்றது. மாநாடு தொடங்குவதற்கு முன் திருச்சி நெடுஞ்சாலையிலுள்ள வளைவி (Arch) லிருந்து புறப்பட்டுக் கடைத்தெரு வழியாக ஊர்வலம் வரும்போது 'தமிழுக்கு ஜே' என்று தொண்டர்கள் முழங்கினர். யானும் என் நண்பர் சிலரும் கூட்டத்திலே இடையிடையே நின்றுகொண்டு 'வாழ்க' என்று உரத்து முழங்கவே 'வாழ்க தமிழ்' 'தமிழ் வாழ்க! என முழக்கஞ் செய்யலாயினர். அது முதல் 'ஜே' ஒழிந்து போயிற்று. வாழ்க என்பது வந்தது.

சென்னையில் கழகம் இருக்கும் பவழக்காரத் தெருவை ஒட்டிய தெருக்களிலுள்ள திருக்கோயில்களின் பக்கம் மேசை யும் நாற்காலியும் போட்டுக் குறிச்சி (stool) ஒன்றின்மேல் ஆவி விளக்கு (gas light) வைக்கப்படும். இந்தி எதிர்ப்பு இயக்கத் தொண்டர்களில் எவரேனும் ஒருவர் தலைமை தாங்குவர். மற்றும் சிலர் பேசுவர். இந்தப்படி பல கூட்டங்கள் நடைபெற்றன. அப்படி நடைபெற்ற கூட்டங்கள் சிலவற்றில் இப்போதைய அமைச்சர்களில் ஒருவரான மாண்புமிகு என். வி. நடராசன் அவர் களும் அவர்தம் நண்பர் திரு முருகேசன் அவர்களும் பேசுவர்.

முன்பு காங்கிரசில் இருந்த திரு என். வி. நடராசன் அவர்கள் இந்தி எதிர்ப்பியக்கத்தில் சேர்ந்து இப்போது தி. மு. க. ஆட்சியில் அமைச்சராயினர். திரு முருகேசனர் பெரம்பூர் பாரக்சில் தொழிலாளர்கட்குத் தனிப் பள்ளி அமைத்துத் தமிழ் நூல்களைப் பயில்வித்து வருவாராயினர்.

சென்னைப் பெத்துநாயக்கன் பேட்டையில் தமிழ்ப் பண்டிதர் மயிலை சிவமுத்து அவர்களும் டாக்டர் தருமாம்பாள் அவர்களும் இந்தி எதிர்ப்பு இயக்கத்தை வலிமைபெறச் செய்து நடத்தி வந்தனர். அவ்விருவருக்கும் துணை நின்ற தொண்டர்கள் சிலரை இங்கே குறிப்பிடுதற்கு இடமில்லை.

21—4—1938இல் முதலமைச்சர் மாண்புமிகு சி. இராசகோபாலாச்சாரியாரவர்களால் தமிழ்நாட்டுப் பள்ளிகளில் இந்திமொழி கட்டாயப் பாடமாகப் புகுத்தப்பட்டது. அதுமுதல் தமிழ்நாடெங்கணும் இந்தி எதிர்ப்பியக்கக் கூட்டங்களும், மாநாடுகளும் நடைபெற்றன.

மூவேந்தர்கோடி. (தமிழ்க்கொடி)

பாண்டியனைக் குறிப்பதற்கு மீனும் சோழனைக் குறிப்பதற்குப் புலியும் சேரனைக் குறிப்பதற்கு வில்லும் அமைத்து ஓவியம் ஒன்று 7—10—37 இல் தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்திற்காக என தன்பிற்குகந்த ஓவியர் திரு ஆ. செகந்நாதாச்சாரியாரவர்களைக் கொண்டு எழுதப்பெற்றது. அவ்வோவியத்தின் மூலப் படிவமே இங்கே காணப்படுவது. இந்தி எதிர்ப்பியக்கத்தில் ஈடுபட்ட அறிஞர்களில் ஒருசிலர் வாய்கூசாமல் தாமே மூவேந்தர் கொடியினைப் படைத்ததாகச் சொல்லி வருகின்றனர்.




சென்னை, தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்தார்
7-10-37 இல்
ஓவியர் ஆ.செகந்நாதாச்சாரியார்
அவர்களைக் கொண்டு
எழுதுவித்தது

இவ்வோவியத்திற்கு அச்சுக்கட்டைகள் பல செய்து பல

வண்ணத்தாள்களில் ஆயிரக்கணக்கில் அச்சிட்டுக் கயிறுகளில் தொங்கும்படி ஒட்டிக் கூட்டங்கள், மாநாடுகள் நடைபெறும் தெருக்களிலும், பந்தல்களிலும் கட்டப்பெறும். கூட்டங்கள் நடத்துவோர் தமது சொந்தப் பொறுப்பிலேயும் அச்சுக் கட்டைகள் செய்து அச்சிட்டுத் தோரணங்கள் கட்டிக் கொள்ளு வார்கள்.

துணியில் நான்கு வண்ணங்களில் தமிழ்க்கொடி

இக்கொடி ஓவியத்துக்கு மஞ்சள், சிவப்பு, பச்சை, கறுப்பு ஆகிய நான்கு வண்ணங்களில் துணிகளில் பெரிதும் சிறிதுமாக அச்சிடுவதற்கேற்ப அச்சுக் கட்டைகள் செய்யப்பெற்றன. மாநாடுகளில் கொடி ஏற்றுவதற்கும், ஊர்வலங்களில் கொம்பு களில் கட்டி ஏந்திச் செல்வதற்கும், மிதிவண்டிகளின் முன்பக்கம் அமைப்பதற்கும் பயன்படுமாறு, குறைந்த விலை வைத்து விற்கப் பெற்றன. அவை 30'/44', 30'/22', 15'/11' ஆகிய அளவுகளில் செய்யப்பெற்றன. அவற்றைச் செய்து கொடுத்தவர் சைதாப் பேட்டையிலுள்ள திரு. பக்தவத்சல செட்டியாராவர். அவர் தம் தம்பியார் கட்டைகளில் ஓவியம் செதுக்குவதில் வல்லவர்.

இக் கொடியினையே பல வண்ணங்களில் துணி விளிம்பு களில் அச்சிட்டு வேட்டி, புடைவை, சட்டை, துண்டு, மேல்வேட்டி கைக்குட்டை ஆகியவை விற்பனைக்குக் கொண்டுவரப்பட்டன. விளிம்புகளிலும், உடலிலும் பன்னிறங்களில் தமிழ்க்கொடி அச்சிட்டு மேசை விரிப்பு, படுக்கை விரிப்பு ஆகியவை விற்கப் பெற்றன. பெரிய தமிழ்க்கொடி ஒன்றும் மேசை விரிப்பு ஒன்றும் இந்தி எதிர்ப்பியக்கத்தை நினைவு கூறும் வகையில் காட்சியமைப்பிற்காகப் பேணிவைக்கப் பெற்றுள்ளன.

தமிழ்நாடு தமிழருக்கே-நாட்காட்டி :

1938ஆம் ஆண்டுக்குரிய நாட்காட்டி ஒன்று வெளியிடப் பெற்றது. எந்த நோக்கங்கொண்டு அஃதச்சிடப்பெற்றது என்பது இதன் பின்பக்கங் காணும் படம் விளக்கும்.

**பெரியார் திருவுருவப் படமும், பெரியார் சிறையில் தவக்கோலம் கொண்டிருக்கும் படமும்**

பெரியார் திருவுருவம் பெரிய அளவில் அழகிய வழுவழுப்புத் தாளில் (Art paper) அச்சிட்டுக் குறைந்த விலைக்கு வழங்கப் பெற்றது. மேலும் பெரியார் சிறையில் இருக்கிறபடி படம்

# தமிழ்நாடு தமிழருக்கே

## தமிழ் வாழ்க





ஈ. வெ. இராமசாமிப் பெரியார்



1938 நாட்காட்டி



சிறையில் பெரியார் தவக்கோலம்

எழுதி அச்சுக்கட்டை செய்து வழுவழுப்பான அட்டையில் அச்சிட்டுக் குறைந்த விலைக்கு விற்கப்பெற்றது.

தமிழ்நாடு தமிழருக்கே-அஞ்சலட்டை, அஞ்சற்கூடு, கடிதத் தாள் :

'தமிழ்நாடு தமிழருக்கே' என்ற தொடரும், பெரியார் உருவப்படமும் அச்சிடப்பெற்ற அஞ்சலட்டை, அஞ்சற்கூடு, கடிதத்தாள் ஆகிய மூன்றையும் அச்சிட்டு அவற்றையே பயன் படுத்துமாறு 'விடுதலை' இதழில் விளம்பரம் செய்யவும் இந்தி எதிர்ப்பியக்கத்தில் ஈடுபட்டோர் பலரும் அவற்றை வாங்கிப் பயன்படுத்துவாராயினர்.

தமிழ்நாடு தமிழருக்கே! தமிழ் வாழ்க! (இரட்டுத்துணித் தூக்குப்பை)

இத்தொடர்களை மேலும் கீழும் அச்சடிக்கச் செய்தும் நடுவில் பெரியார் திருவுருவம் அச்சடிக்கச் செய்தும் இரட்டுத் துணியில் தூக்குப் பைகள் செய்யப்பெற்றன. அறிஞர் அண்ணா, முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் ஆகியோர் உருவங் களை யமைத்துத் தனித்தனித் தூக்குப் பைகளும் செய்து விற்கப் பெற்றன.

கபிலரகவல், ஆபுத்திரனகவல் :

இவற்றில் கபிலரகவல் சங்ககாலக் கபிலரால் எழுதப் பெற்றதாகத் தெரியவில்லை. எனினும் சில நூற்றாண்டுகட்கு முன் மணிமேகலை காலத்துக்குப்பின் அறிஞரொருவரால் அஃது எழுதப் பெற்றிருத்தல் வேண்டும். தமிழ் நாட்டிலுள்ள ஒருசார் இனத்தார் தமிழ் மொழியைச் சூத்திர பாஷை என்றும் சம்ஸ்கிருதத்தைத் தேவபாஷை என்றும் சொல்லி வந்தனர். சங்க நூல்களைப் பதித்த என் பெருமதிப்புக்கும் பேரன்புக்கு முரிய முதுபெரும்புலவர் டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள் கூடச் சொற்பொழிவு, நலம் என்ற தூய தமிழ்ச் சொற்களைக் கேட்பதற்கு மனமில்லாமல் உபந்நியாசம், பிரசங்கம், சுகம், சௌக்கியம் என்ற வடசொற்களைச் சொன்னாலென்ன என்று தமிழ் அறிஞர் சிலரிடங் கூறியது செந்தமிழ்ச் செல்வியில் முன்னமே வெளியிடப்பெற்றுள்ளது, அவ்வினத்தார் உடை யணியும் முறை, பேசும் முறை, இல்லச் சடங்குகளை நடத்தும் முறை ஆகியவற்றில் தங்களுக்கென ஒருவகை அமைத்துக் கொண்டு நடந்து வருகின்றனர். பார்ப்பனர் அல்லாதாரோடு சிலர் கலந்திருப்பினும் ஒட்டியும் ஒட்டாமலுமுள்ள உறவைத் தான் காண முடியும். தூய செந்தமிழ் ஆளப்பெறுஞ் சங்க நூல்கள் இருக்கவும் மணிப்பிரவாள நடை எங்ஙனம் நுழைந்தது?

இறைவன் இறைவியர் பெயர்களும் திருக்கோயில் ஊர்ப் பெயர்களும் தூய தமிழில் இருக்கவும் அவற்றை வீழ்த்திவிட்டு வடமொழிப் பெயர்கள் எங்ஙனம் நுழைக்கப்பெற்றன? என்றின்னவற்றையெல்லாந் தமிழ் மக்கள் புரிந்துகொள்ளும் பொருட்டே 'கபிலரகவல்', 'ஆபுத்திரனகவல்' ஆகிய இரண்டும் இந்தி எதிர்ப்பியக்கத்தையொட்டிக் காலணு (1½ பைசா) வெளியீடுகளாக அச்சிடப்பெற்றன. ஒவ்வொன்றிலும் முப்பதாயிரம் படிகள் வரை அவ்வியக்கத்தின்போது விற்பனையாயின. 'ஆபுத்திரனகவல்' முகப்பிலே 'பார்ப்பனக் கொடுமையும் பசுக்கொலை வேள்வியும்' (இவை இந்நூலிலடங்கிய செய்திகளே படைக்கப் பெற்றவையல்ல) என்னுந் தொடர்கள் அச்சிடப் பெற்றிருந்தன. அவற்றை வாங்கி விற்ற தொண்டர்கள் 'பார்ப்பனக் கொடுமை காலணு' என்றே கூவிவிற்றனர். காலத்துக்கேற்றபடி தமிழ் நாட்டிலே தமிழைப் படித்துத் தமிழால் வாழும் மக்கள் யாவரும் ஓரினத்தவராய் வாழ வழிகாட்ட வேண்டுமென்பதே இந்நூல் எழுதற்குரிய காரணம் ஆகும்.

திருக்குறள், நாலடியார், திருவாசகம் ஆகிய மூன்றையும் ஆங்கிலத்திலே மொழிபெயர்த்த தமிழ்ப் பேரறிஞர் டாக்டர் ஜி. யு. போப், எம். ஏ., டி. டி. அவர்கள் கபிலரகவலை மொழிபெயர்த்துள்ளனர். எட்வர்ட் சூவிட் இராபின்சன் எழுதிய தமிழ் மெய்யுணர்வு (Tamil wisdom) என்ற தமது நூலிலும் 'கபிலரகவலை' மொழிபெயர்த்துள்ளனர். எனவே அது அப்பேரறிஞர் இருவர் தம் உள்ளங்களைக் கவர்ந்த நூல் என்பது இதனுல் போதருகின்றதன்றே!

டாக்டர் ஜி. யு. போப் அவர்கள் கூலவாணிகன் சாத்தனுர் இயற்றிய மணிமேகலையினைச் செய்யுள் வடிவில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கக் கருதி டாக்டர் சாமிநாதையரவர்கள் பதிப்பித்த மணிமேகலையிலே குறிப்புக்களை எழுதியுள்ளனர். செய்யுள் நடையில் அதனை அவர்கள் இயற்றவில்லை. ஆனுல், அவர்கள் ஆங்கில உரைநடையில் எழுதிய 'மணிமேகலை கதை' 'தமிழர் தொன்மை' (Tamilian Antiquary) என்னும் இதழில் வெளிவந்துள்ளது. எனவே ஆபுத்திரனகவல் கதை அந்நூலின்கண் உள்ளது.

இந்தி எதிர்ப்பு இயக்கத்தையொட்டித் தமிழர் பழக்க வழக்கங்களையும் பண்பு நெறிகளையும் தமிழ் மக்கள் பகுத்துணரும் பொருட்டே இவ்விரண்டு நூல்களையும் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் வெளியிட்டதென்பது நன்கறியக் கிடக்கிறது.

**பார்ப்பனர்களும் பழமொழிகளும் :**

பழமொழி நூற்கோவைகளிலிருந்து திரட்டிய பார்ப்பனரைக் குறிக்கும் பழமொழிகள் ஏறக்குறைய எண்பதிருக்கும். அவற்றைத் தொகுத்துத் திருச்சி 'நகர தூதன்' என்ற கிழமை இதழில் வெளியிடக் கொடுத்தேன்.

**தனித்தமிழ்த் தொண்டு: (ஏழு நூல்களை வெளியிட்டமை)**

இந்தி எதிர்ப்பியக்கத்தையொட்டித் தனித்தமிழ் வளர்ச்சிக் குரிய தொண்டையும் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் ஆற்ற வேண்டியதாயிற்று. எனவே அழைப்பிதழ் எழுதுமுறை, பிழையின்றி எழுதுமுறை, வடசொல் தமிழகரவரிசை, மக்கள் பெயர் அகரவரிசை, இல்லப் பெயர் அகரவரிசை, பழமொழி அகரவரிசை, உவமை அகரவரிசை ஆகிய ஏழு நூல்களையும் அச்சிட்டு ஓரணா விலை வைத்து விற்பனை செய்தது. அதனால் அழைப்பிதழ்களெல்லாம் தூய தமிழில் எழுதி அச்சிடப்பெற்றன. மக்கள் பெயர்களும் இல்லப் பெயர்களும் தூய தமிழில் வைக்கப் பெறுதல் வேண்டுமென்ற உணர்வை ஏற்படுத்திற்று. அதன் பிறகே புகைவண்டி நிலையப் பெயர்களிற் பல தூய தமிழாக்கம் பெற்றன.

**குறிப்பு :**

தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துக் கும் தமிழ்ப் பாதுகாப்புக் கழகத்துக்கும் யாதொரு தொடர்புங் கிடையாது. தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் சிலகாலம் பவழக்காரத் தெரு 156ஆம் எண் இல்லத்திலும் சிலகாலம் 137ஆம் எண் இல்லத்திலும் நடைபெற்றது.

மேலே குறிப்பிட்ட பொருள்கட்குக் கிடைக்கப்பெற்ற கட்டளைகளில் மூன்றைமட்டும் கீழே குறிப்பிடுகின்றேன்.

1. கட்டளை அனுப்பியவர் : பி. எஸ். சண்முகம் ஸ்டோர்
   15—12—1938   செட்டி சவுளி வியாபாரம்
   7, கிரேட் காட்டன் ரோடு
   தூத்துக்குடி.

கேட்கப்பெற்ற பொருள்கள் :

| | | | |
|---|---|---|---|
| கைக்குட்டை | 12 | 11/5 தமிழ்க்கொடி | 3 |
| ஈ. வே. ரா. போட்டோ படம் | 12 | 22/30 ,, | 2 |
| ,, படம் போட்ட | | 44/30 ,, | 1 |
| தூக்குப் பை | 3 | சட்டைத்துணி முழம் | 9 |
| 4½ முழ வேட்டி | 6 | கலர் புடைவை தமிழ்க்கொடி | |
| 7 முழ வேட்டி | 2 | போட்டது | 1 |

2. கட்டளை அனுப்பியவர் : எஸ். ஆர். இரத்தின முதலியார் கம்பெனி
10—1—1938 டுப்ளே தெரு
புதுவை.

| | | | |
|---|---|---|---|
| தாக்குப்பை பெரியார் படத்துடன் | 12 | ஆபுத்திரனகவல் | 25 |
| துண்டு $3\frac{1}{2}$ முழம் | 12 | வடசொல் தமிழ் அகரவரிசை | 25 |
| தமிழ்க்கொடி 22/30 | 3 | பிழைநீக்கி எழுதுமுறை | 25 |
| கபிலரகவல் | 25 | மக்கட்பெயர் அகரவரிசை | 25 |
| | | பழமொழி அகரவரிசை | 25 |

3. கட்டளை அனுப்பியவர் : அ. மா. முத்தையா,
10—1—1938 அறை எண் 16
சுவிடிஸ் மிஷன் ஆஸ்பத்திரி
திருப்பத்தூர்
(இராமநாதபுரம் மாவட்டம்)

| | | | |
|---|---|---|---|
| அஞ்சலட்டை | 25 | தமிழ்க்கொடி (4 வண்ணத்தில்) | 3 |
| அஞ்சற்கூடு | 25 | சிறையுள் பெரியார் தவக்கோலம் படம் | 9 |
| கடிதத் தாள் | 100 | | |

## கருத்தறிவிப்புத்தாள்

தமிழ்நாட்டுப் பள்ளிகளில் வடநாட்டு இந்தியைக் கட்டாயப் பாடமாக்கப்போவதாக முதலமைச்சர் திரு சி. இராசகோபாலாச்சாரியார் 10-8-1937இல் தெரிவித்தார்.

“இந்திமொழி கட்டாயமாக்கப்பட்டால் தாய்மொழியாம் தமிழ்க் கல்விக்குப் பெருங்கேடு ஏற்படும். எனவே இந்தி மொழி கட்டாயமாக்கப்படுவதை அடியிற் கையொப்பமிட்டிருக்கிற அனைவரும் உண்மையாகக் கண்டிக்கிறோம்” என்று தாளின் தலைப்பில் அச்சிட்டு ஆயிரக்கணக்கான படிகளை இந்தி எதிர்ப்பியக்கத்தில் ஈடுபட்டிருப்போர்களுக்கெல்லாம் அனுப்பிக் கையெழுத்துக்கள் வாங்கப்பெற்றன. அவற்றையெல்லாம் தொகுத்து அப்போதைய கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் ப. சுப்பராயன் அவர்கட்கு அவை அனுப்பிவைக்கப்பெற்றன.

கருத்தறிவிப்புத்தாள் பற்றிய கடிதம் ஒன்றுமட்டும் போலிகைக்காகக் கீழே குறிக்கப்பெறுகின்றது.

அனுப்பியவர் : வித்துவான் இ. சிவகுருநாதன்
தலைவர், கடந்தைத் தமிழ்ச் சங்கம்,
பெண்ணாகடம், (தெ. ஆ. மா)

29—2—1937

“தாங்கள் தமிழன்னைக்கு இதுகாலை உண்டாக்கியுள்ள நெருக்கடி பற்றி இந்தியை எதிர்த்துப் “பொது மக்கள் கருத்

தறிவிப்புத்தாள்' வெளியிட்டுள்ளமை குறித்து அளவிலா மகிழ்வு எய்தினேம். அத்தாள்கள் நூற்றுக்கணக்கானவற்றை இவண் உடனே அனுப்பி வைக்குமாறு வேண்டுகிறோம். கையெழுத்துக்கள் ஆயிரக்கணக்காக வாங்கி அனுப்புவோம். உடன் அத்தாள்களை அனுப்பி வைத்திடுக. தமிழ் நாடெங்கணும் அனுப்பியிருப்பீர்களென்று எண்ணுகிறோம். தங்கள் தமிழ்த் தொண்டை யாங்கள் என்றென்றும் பாராட்டுவோம்.

தனித்துண்டு அறிக்கைகளின் வழியும் விடுதலை இதழின் வழியும் மேலே குறிப்பிட்ட பொருள்கள் விளம்பரப்படுத்தப் பெற்றன.

## சென்னையில் இந்தி எதிர்ப்பு-மகளிர் மாநாடும் ஈ. வெ. ரா. அவர்கட்குப் 'பெரியார்' பட்டமும்

1938 நவம்பர்த் திங்கள் 13ஆம் நாள் பிற்பகல் ஒரு மணிக்குப் பெத்துநாய்க்கன் பேட்டையிலிருந்து இந்தி எதிர்ப்பு மகளிர் ஊர்வலம் புறப்பட்டது. ஆயிரம் பெண்களுக்குமேல் அவரவர்களின் குழந்தைகளுடன் வந்து ஊர்வலத்திலே கலந்து கொண்டனர். ஒற்றைவாடை நாடக அரங்கில் இந்தி எதிர்ப்பு மாநாடு நடைபெற்றது.

மறைத்திரு மறைமலையடிகளார் திருமகளாரும் என் தமையனார் மனைவியாரும், வடசொற்றமிழ் அகரவரிசை, தனித் தமிழ்க் கட்டுரைகள், முப்பெண் மணிகள் வரலாறு, பட்டினத்தார் பாராட்டிய மூவர், ஜோன் ஆப் ஆர்க், பிளாரன்சு நைட்டிங்கேல் முதலான நூல்களைச் செந்தமிழ் நடையில் எழுதியவருமான திருவாட்டி நீலாம்பிகையம்மையார் தலைமையில் மாநாடு நடைபெற்றது. ஊர்வலத்துக்கு ஏற்பாடு செய்து முன்னணியிலிருந்து நடத்திச் சென்றவர் டாக்டர் தருமாம்பாள் அம்மையார் ஆவர். அவர்கள் தமிழ்க்கொடி அச்சிடப் பெற்ற புடைவைகளில் 16 வாங்கி அரங்கின் மேடைமேல் அமர்ந்திருந்த தலைவியார், பேச்சாளர் ஆகியோர் அனைவரையும் கட்டிக்கொள்ளச் செய்தனர். அந்தக் குறிப்பு அன்றைய மெயில் (Mail) நாளிதழில் வெளிவந்தது.



அந்த மாநாட்டிலேதான் மதிப்புக்குரிய மாவீரர் ஈ. வெ. ரா. அவர் கட்குப் 'பெரியார்' என்னும் பட்டம் வழங்கப்பெற்றது.

இந்த மாநாட்டுக்கு முன்பு தளபதி சி.என். அண்ணாத் துரை அவர்கள் சிறை புகுந்தமையும் பின்பு பெரியார் சிறை புகுந்தமையும், ஆயிரத்துக்கு மேற்பட்ட மகளிர், ஆடவர் முதலான தொண்டர்கள் சிறைபுகுந்தமையும் உணர்தற்பாலன.

கருவூர் ஈழத்தடிகள் சிறையிலிருந்தபோது அவர்கள் கைச் செலவுக்கு ரூபா 5 முதல் ரூ. 10 வரை இடையிடையே அனுப்பிவைப்பதோடு மெயில் நாளிதழும் அனுப்பிவைக்கப் பெற்றது. அவர்கள் எழுதிய கடிதங்களெல்லாம் தனிக் கோப்புக்கள் இரண்டில் இருக்கின்றன. மறைத்திரு மறைமலை யடிகளார் மூத்த மருமகள் திருவாட்டி மா. சரோஜினியம்மையும், இளைய மருமகள் திருவாட்டிதி. அறிவம்மையும் தங்கள் குழந்தை களுடன் சிறை சென்றமையும், கூட்டுறவுத் துறையில் துணைப் பதிவாளராகவிருந்து ஓய்வு பெற்ற மதிப்புமிகு செ. தெ. நாயகம் அவர்கள் சிறை புகுந்தமையும் இயக்கத்திற்குப் புத்துணர்ச்சி யூட்டியன.

**மாண்புமிகு டாக்டர் கலைஞரவர்களும் தமிழ்க் கொடியும்:**

முதலமைச்சர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் தாம் எழுதிய 'நெஞ்சுக்கு நீதி' என்ற தமது வரலாற்றிலே "திருவாரூரிலே யாம் படித்துக் கொண்டிருந்தபோது, இந்தி எதிர்ப்பு மாணவர் ஊர்வலத் திலே 'தமிழ்க் கொடி'யினை ஏந் திக்கொண்டு 'இந்தி ஒழிக' 'தமிழ் வாழ்க' என்று முழங்கிக் கொண்டு சென்றோம்'' என்று எழுதியுள்ளனர்.



மறைமலையடிகள் நூல்நிலை யத்திலும், கலைமன்றத்திலும் நடைபெறும் இந்தி எதிர்ப்பியக் கக் காட்சி யமைப்பிலே "நம் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் திருவாரூரில் இந்தி எதிர்ப்பு மாணவர் ஊர்வலத்திலே ஏந்திச் சென்ற கொடி இதுவே'' எனப் பெரிய எழுத்துக்களில் அச்சிடப்பெற்ற அட்டை ஒன்று தமிழ்க் கொடியின் கீழே வைக்கப்பெறுவது வழக்கம்.

27-4-1972இல் டாக்டர் கலைஞர் அவர்கள் பல்லாவரம் மறைமலையடிகள் கலைமன்றத்தைக் காணவந்திருந்தபோது இந்தி எதிர்ப்பியக்கக் காட்சியில் இருந்த மேற்படி கொடியினை யும் அட்டையினையும் கண்டு புன்முறுவல் கொண்டனர்.

**வெளிப்படைக் கடிதம் (An open Letter)**

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவரும் பேராசிரியரும் 35 ஆண்டுகட்குமேல் தொடர்பாகப் பேராயக்கட்சி (Congress) உறுப்பினராக இருந்தவருமாகிய மதிப்புமிகு நாவலர் சோமசுந்தர பாரதியார் எம். ஏ., பி. எல்., அவர்கள் 25—10—1937 இல் முதலமைச்சர் சி. இராசகோபாலாச்சாரியாரவர்கட்கு இந்தியைக் கட்டாயப் பாடமாகப் புகுத்தினால் தமிழ்மொழிக்கும் தமிழர்க்கும் பெருங்கேடுகளை விளைவிக்கும் என்று 24 பக்கங்களில் சட்ட வல்லுநர் என்ற நிலையிலும் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர் என்ற நிலையிலும் வெளிப்படைக் கடிதம் ஒன்று ஆங்கிலத்திலே எழுதியுள்ளனர். அதனை அச்சிட்டு வெளிப்படுத்தும் பொறுப்பினை என்னிடம் ஒப்புவித்தனர். அது 2000 படிகள் அச்சிடப்பட்டு அரசியல் தலைவர்கட்கும் அறிஞர்கட்கும் அனுப்பிவைக்கப் பெற்றன. அதனை அச்சிடுவதற்குரிய செலவுத் தொகை முழுவதையும் அண்மையில் காலஞ்சென்ற, தமிழ்ப் புரவலரும் பெருஞ்செல்வருமாகிய கலைத்தந்தை கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்கள் ஏற்றுக் கொண்டனர்.



உயர்திரு பாரதியாரவர்களின் பெருமதிப்பிற்குரிய ஆசிரியர் மறைத்திரு மறைமலையடிகளார் எழுதிய 'இந்தி பொது மொழியா ?' என்ற நூல் முதற்கண்ணும் அவர்களுடைய மாணவர் எழுதிய 'வெளிப்படைக் கடிதம்' அதனை அடுத்தும் வெளியிடப்பெற்றன. இவ்விரண்டும் ஒரே அளவில் 24 பக்கங்களைக் கொண்டனவாய் அமைந்துள்ளன என்பது வியப்பிற்குரியது ஆனால் முன்னது தமிழிலும் பின்னது ஆங்கிலத்திலும் எழுதப்பெற்றவை. தவத்திரு ஈழத்துச் சிவானந்த

அடிகள், பி. ஏ., இந்தி பொது மொழியா? என்ற நூலை அச்சிட்டதுபோல் ஆங்கிலத்திலுள்ள வெளிப்படைக் கடிதத்தைத் தமிழாக்கஞ்செய்து 10,000 படிகள் அச்சிட்டு அதனை 1938 மார்ச்சுத் திங்களில் பரப்பி வைத்தனர். அதனை அச்சிடுவதற்குரிய செலவினைச் சின்னதாராபுரம் பெருநிலக்கிழார் உயர்திரு மா. சென்னிமலைக் கவுண்டரவர்கள் ஏற்றுக்கொண்டனர்.

Is Hindi a Common Tongue?

அறிஞர் சிலர் விரும்பியவாறு மறைத்திரு மறைமலையடிகளார் 'இந்தி பொது மொழியா?' என்ற நூலை ஆங்கிலத்திலே மொழி பெயர்த்தனர். முதற்கண் எழுதப்பட்ட நூலில் மொழி பற்றிய குறிப்புக்களேயுள்ளன. ஆரியக் கலப்பினால் தமிழ் மொழிக்கும், தமிழர்க்கும் ஏற்பட்ட கேடுகளை விளக்கி எழுதுவான் கருதி அப்படியே மொழி பெயர்க்க விரும்பாமல் வேறாகவே விரித்து எழுதி 'Is Hindi a Common Tongue?' என்ற தலைப்பில் தாம் பதித்து வந்த The Ocean of Wisdom (மெய்யுணர்வுக்கடல்) என்ற ஆங்கில இதழில் வெளியிட்டு வந்தனர். 1937 திசம்பர், 1938 மார்ச்சு, மே ஆகிய மூன்று திங்கள் இதழ்களில் 24 பக்க அளவில் எழுதியதோடு அது நின்று விட்டது. ஏன் தொடர்ந்து எழுதினார்களில்லை என்பது தெரியக்கூடவில்லை. எனவே 'இந்தி மொழி மொழியா' என்ற நூலை Can Hindi be the Lingua Franca of India என்னும் இந்நூல் திரு இரா பாலகிருட்டிண முதலியார் பி. ஏ. எல். டி. அவர்களைக் கொண்டு மொழி பெயர்க்கச் செய்து கழகவழி 1969 சனவரித் திங்களில் வெளியிடப்பட்டது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆசிரியன்மார் அனைவரும் சேர்ந்து இந்தியைக் கட்டாயப் பாடமாக்கினால் அரசினர் ஆதிக்கத்தினால் தமிழ்மொழி வளர்ச்சி குன்றும். எனவே அதுபற்றிப பொதுமக்கள் தீர்ப்பு (Referendum) எடுக்கவேண்டுமென்று கம்பிவழிச் செய்தி 16—9—1937இல் மதிப்புமிகு முதலமைச்சரவர்கட்கு அனுப்பிவைத்தனர்.

இதையொட்டி உயர்திரு நாவலர் பாரதியாரவர்கள் சென்னைக்கு வருவதை முன் கூட்டியே எனக்குத் தெரிவிப்பதும் யான் அவர்களைக் கண்டு பேசுவதும் உண்டு. இந்தி எதிர்ப்பியக்கத்தின்போது அழைக்கப் பெற்ற ஊர்கட்கெல்லாம் ஒல்லும் வகையில் சென்று சொற்பொழிவாற்றி வந்துள்ளனர். அவர்கள் தமிழ்மொழிக்கு ஆற்றிய தொண்டு பொன்னெழுத்திற் பொறிக்கற்பாலது.

அமைச்சரவையில் கல்வி அமைச்சராகவிருந்த டாக்டர் ப. சுப்பராயன் அவர்களும் மறைத்திரு மறைமலையடிகளார் மாணவராவர். முதலமைச்சரவர்கள் இந்தியைக் கட்டாயப் படுத்துவது கல்வி அமைச்சரவர்கட்குப் பிடித்தமில்லை என்பது அவர்கள் பேச்சுகளில் புலப்படுவதுண்டு. ஆகவே உயர்திரு நாவலர் ச. சோமசுந்தர பாரதியாரவர்கள் மாண்புமிகு கல்வி அமைச்சர் ப. சுப்பராயனவர்கட்கு 20-10-37இல் ஆங்கிலத்தில் நீண்டதொரு கடிதம் எழுதியுள்ளார்கள். அக்கடிதத்தின் மூலப்படி பாரதியாரவர்கள் எனக்கெழுதிய கடிதக் கோப்பில் இருக்கின்றது.

அக்கடிதத்தின் ஒருபகுதி மட்டும் அடியிற் காண்க.

"It is rumoured that you are about to proceed to Wardha to take part in some Conference. especially convened to discuss among other subjects, the desirability of introducing Hindi in Provincial schools with a view to making it compulsarily a common language for the whole of India. I do not know how far it is well-founded. But I ask your leave to point out that if it were true as a responsible minister and a patriotic Tamil leader, you should not lend the weight of your name and connection to any such Conference to which no acredited Tamil scholars are invited and from which obviously all who are opposed to the compulsary introduction of Hindi appear to be excluded.

I am sending a reasoned memorandum of objections to the Hon'ble the Prime Minister in a day or two. May I request you to abstain from taking part in any proceedings likely to affect the future of Tamil in the Tamil Province.

I also take leave to reserve the right of publishing this correspondence if need be.

(Signed) S. S. Bharathi

### கழக ஆட்சியாளரும் பத்மஸ்ரீ பட்டமும்

யான் பதிப்புத்துறையில் பல துறைகளில், ஆயிரத்துக்கு மேற்பட்ட நூல்களை அழகுற வெளியிட்டிருப்பதையும், நெல்லை, சென்னை, பல்லாவரம் ஆகிய மூன்று ஊர்களிலும் ஆராய்ச்சி யாளர்கட்குப் பயன்படும் வகையில் மூன்று நூல்நிலையங்களை நடத்தி வருவதையும், இந்தி எதிர்ப்பு இயக்கத்தின்போது, தொண்டர்கட்கு உணர்ச்சியும் ஊக்கமும் ஊட்டும் வகையில்

செய்த பல்வகைப் பணிகளையும் நன்குணர்ந்த பேரறிஞர் அண்ணா அவர்கள் பரிந்துரைத்ததனால் நடுவணரசு 1969இல் எனக்குப் பத்மஸ்ரீ (தாமரைச் செல்வர்) என்ற பட்டம் வழங்கிற்று.

1969 பிப்ரவரி 3ஆம் நாள் பேரறிஞர் அண்ணா அவர்கள் காலமானார்கள். 7-2-1969இல் நெல்லையில் நடைபெற்ற பங்காளிகள் கூட்டத்துக்குப் புறப்பட்டுப்போய்ச் சென்னைக்குத் திரும்புகிற வழியில் மதுரைக் கிளை நிலையத்தில் தங்கினேன்.

அண்மையில் காலஞ்சென்ற என் பெருமதிப்புக்கும் பேரன்புக்குமுரிய கலைத்தந்தை கருமுத்து தியாகராசச் செட்டியாரவர்களை மீனாட்சி ஆலை மாளிகையில் காணச் சென்றேன். எனக்கு பத்மஸ்ரீ பட்டம் கிடைக்கப்பெற்றமை குறித்துப் பாராட்டி வாழ்த்தினர். அடுத்துத் தமது வரலாறும் கேட்கப்பட்டதென்றும், அவ்வரலாற்றில் தாம் இந்தி எதிர்ப்பியக்கத்தில் ஈடுபட்டமை குறிப்பிடப்பட்டதென்றும் அங்ஙனமிருக்கும்போது தமக்கு எப்படி நடுவணரசு பத்மஸ்ரீ பட்டம் வழங்குமென்றும் சொன்னதை இங்கே குறிப்பிடுவது பொருத்தமாகும்.

என் கெழுதகை நண்பர் காஞ்சி மணிமொழியாரைப்போல் இந்தி எதிர்ப்பியக்கத்தில் நேர்முகமாக இறங்கியிருப்பேனானால் கழக நிலை என்னவாகியிருக்கும் என்பதை யான் விளக்கத் தேவையில்லை.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை நிறுவிய என் தமையனார் திருநெல்வேலியில் தமிழ்ப் பாதுகாப்புச் சங்கத்தைத் தொடங்கிச் செய்த தொண்டுகளைப் பற்றித் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளேன்.

**நெல்லைத் தமிழ்ப் பாதுகாப்புச் சங்கம்**

என் அருமைத் தமையனார் 1937 செப்டம்பர்த் திங்களில் தமிழ்ப் பாதுகாப்புச் சங்கத்தை நெல்லையில் அமைத்தனர். அதற்கு ஓய்வுபெற்ற தாசில்தார் திரு மா. வே. நெல்லையப்ப பிள்ளை, பி.ஏ., அவர்கள் தலைவராவர். டாக்டர் ஆர். வி. சொக்க லிங்கம், எம்.பி.பி.எஸ். அவர்கள் தலைமையில் முதல் இந்தி எதிர்ப்பு ஊர்வலம் 5-9-1937இல் தொடங்கப்பெற்றது. இந்தி ஒழிக! தமிழ் வாழ்க! என்று தொண்டர்கள் முழங்கிக்கொண்டு நான்கு தேர்த் தெருக்களின் வழியாகச் சென்று மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளித் திறந்தவெளியிடத்துக்குச் சென்றனர். பேரறிஞர் மு. சி. பூரணலிங்கம்பிள்ளை பி. ஏ., எல்.டி. அவர்கள் தலைமை

யில் கூட்டம் நடந்தது. திருவாளர்கள் மா. வே. நெல்லையப்ப பிள்ளை, வள்ளல் சிவஞான தேசிகர், பேராசிரியர் புன்னை வனநாத முதலியார் முதலியோர் கலந்துகொண்டு நான்கு தீர்மானங்களை நிறைவேற்றினர்.



11-9-1937இல் நெல்லைத் தென்னம் பிள்ளைத் தெருவில் இரண்டாவது கூட்டமும் நடைபெற்றது. 15—9—1937இல் பள்ளிகளில் 1 முதல் 3 படிவங்களில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்குவதால் தமிழ் மொழிக்கு ஏற்படும் தீங்குகளை ஆங்கிலத்திலே விளக்கி நீண்டதோர் அறிக்கை அச்சிடப்பட்டுக் காந்தி அடிகள், சவகர்லால் நேரு ஆகியோர்களுக்கும் மற்றும் அறிஞர்கட்கும், ஆங்கில இதழ்கட்கும் அனுப்பிவைக்கப் பெற்றது. 20-9-1937இல் பாளையங்கோட்டை கர்சன் திறந்த வெளியிடத்திலே மூன்ருவது இந்தி எதிர்ப்புக் கூட்டம் நடைபெற்றது.

வெளியூர்களிலிருந்து சில கூட்டங்கட்கு மொழிப் பேரறிஞர் ஞா. தேவநேயப் பாவாணர். சாத்தூர் வழக்குரைஞர் கந்தசாமி முதலியார், விருதை சிவஞான யோகிகள் முதலியோர் வரவழைக்கப் பெற்றனர்,

சங்க அமைச்சர் தமிழகத்தில் (1) இந்தியைக் 'கட்டாயப் பாடமாக்க விடமாட்டோம், தமிழே கட்டாயப்பாடம் ஆகவேண்டும்', (2) 'தமிழ்த்தாய்ப் பாட்டும்' (3) 'தமிழும் இந்தியும்', (4) 'தமிழா! உனக்கு என்ன மதி?' (5) 'இந்தி மறுப்புக் கட்டுரைக் கொத்து', (6) 'இந்தி எதிர்ப்புப் பாடல்கள்' (7) முதலமைச்சர் கனம் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியாரவர்கட்கு வெளிப்படைக் கடிதம் (8) Our Premier and Hindi', முதலிய தலைப்புக்களில் சில அறிக்கைகளைச் சங்க வெளியீடுகளாக அச்சிட்டு இந்தி எதிர்ப்புணர்ச்சிக்கு ஊக்கம் ஊட்டினர்.

சங்க அமைச்சரவர்கள் சென்னையிலிருந்து அறிஞர் சி. என். அண்ணுந்துரை எம். ஏ., அவர்களை வரவழைத்து



மூன்று கூட்டங்களில் பேசுமாறு ஏற்பாடு செய்தனர். முதல் கூட்டம் 12-10-37இல் நெல்லை மந்திர மூர்த்தி உயர்நிலைப் பள்ளித் திறந்த வெளியிடத்தில் பேரறிஞர் மு. சி. பூரணலிங்கம் பிள்ளை பி. ஏ., எல். டி. அவர்கள் தலைமையில், நடந்தது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேரறிஞர் நாவலர் சோமசுந்தர பாரதியார், எம். ஏ., பி. எல்., அவர்களும், அறிஞர் சி. என். அண்ணாத்துரை, எம்.ஏ. அவர்களும் 'இந்தியைக் கட்டாயப் பாடமாக்க வேண்டுமா?' என்னும் பொருள்பற்றிப் பேசினார்கள். பாளையங்கோட்டை கர்சன் திறந்த வெளிப்பரப்பில் நடைபெற்ற இரண்டாவது கூட்டத்திலும் அறிஞர் சி. என். அண்ணாத்துரை அவர்கள் பேசினர். மூன்றாவது கூட்டம் நெல்லை மாணவர் சங்கச் சார்பில் திருநெல்வேலிப் பெரிய தெருவில் நடைபெற்றது. அக்கூட்டத்திலும் அறிஞர் அண்ணாத்துரை அவர்கள் இந்தியைப் பள்ளிகளில் கட்டாயப் பாடமாக்குவதனால் தாய் மொழியாம் தமிழ் மொழிக்கு ஏற்படும் பெருங்கேட்டினைத் தெளிவாக எடுத்து விளக்கிப் பேசி மாணவர்கட்கு எழுச்சியும் உணர்ச்சியும் ஊட்டி, அவர்கள் உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்-

## ஹிந்தி கண்டனக் கூட்டம்.

12-10-37 செவ்வாய்க்கிழமை மாலை 6 மணிக்கு

திருநெல்வேலி,

ஸ்ரீ மந்திரமூர்த்தி ஹைஸ்கூல் மைதானத்தில்

ஒரு பொதுக்கூட்டம் நடைபெறும்.

முன்னீர்ப்பள்ளம்,

திருவாளர்.

மு. சி. பூரணலிங்கம் பிள்ளை, பி.ஏ., எல் டி.,

அவர்கள் தலைமை பூண்பார்கள்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேராசிரியர்,

திரு. S. சோமசுந்தர பாரதியார், M.A., B.L.,

அவர்களும்,

" சி. என். அண்ணாத்துரை, M. A.,

அவர்களும்,

ஹிந்தியைக் கட்டாய பாடமாக்கவேண்டுமா?

என்பதைப்பற்றிப் பேசுவார்கள்.

அனைவரும் வருக! வருக!!

திருநெல்வேலி, 11–10–'37 } தமிழ்ப் பாதுகாப்புச் சங்கத்தார்.

குறிப்பு:— 13–10–37 புதன்கிழமை இரவு 7 மணிக்கு பாளையங்கோட்டை, கர்சான் மைதானத்தில் மேற்குறித்த இருவர்களும் வேறு சில அன்பர்களும் பேசுவார்கள்

வைசிய பிரஸ், திருநெல்வேலி

தனர். அக்கூட்டங்களின் அறிக்கைப் படங்களைப் பக்கங்ளிலே காண்க.

அறிஞர் அண்ணா அவர்கள் அக் கூட்டங்களில் பேசியதை நினைவு கூர்ந்து நெல்லைக்குப் போகும்போதெல்லாம் தம் நண்பர்களிடம் இந்தி எதிர்ப்பு இயக்கத்தைக் குறிப்பிட்டுத் தம்மைத் திருவரங்கனார் 1937இல் நெல்லைக்கு அழைத்தமையினைப் பற்றி அடியிற் கண்டவாறு பேசுவதுண்டு.

உ

நெல்லை மாணவர் சங்கம்
பெரிய தெரு :: திருநெல்வேலி

அன்புடையீர்,

நிகழும் 1113-ம் ௵ புரட்டாசி ௴ 28-உ (14-10-37) வியாழக்கிழமை மாலை 6-30 மணிக்கு பெரிய தெரு, முருகபிரான் பஜனைமடாலயத்தில் ஓர் கூட்டம் நடைபெறும்.

அவ்வமயம்
சென்னை, திருவாளர்
சி. என். அண்ணாத்துரை, எம். ஏ.
அவர்கள்
"ஹிந்தியைக் கட்டாயப் பாடமாக்க வேண்டுமா?"
என்னும் பொருள்பற்றிப் பேசுவார்கள்.

அன்பர்கள் அனைவரும் வந்து கேட்டு இன்புற வேண்டுகிறோம்.

திருநெல்வேலி 14-10-37
ஏ. க. இராமலிங்கம்
வ. அங்கப்பன்
காரியதரிசிகள்

ஷிவாக் பிரஸ், திருநெல்வேலி

"திருவாட்டி நீலாம்பிகை யம்மையார் ஆக்கியனுப்பும் உணவினை உண்ணுவேன், கழக நிலையத்திலே தங்குவேன். கழக அமைச்சர் திருவரங்கனார் ஏற்பாடு செய்யும் கூட்டங்களில் பேசுவேன். 40, 50 பேர்கள் கூட்டங்கட்கு வருவர். இடையிடையே கற்கள் வந்து விழும்."

இந்தப்படி ஒரு முறை அறிஞர் அண்ணா அவர்களுடன் இயங்கியில் தாம் போகும்போது 1967இல் முதன்முதல் ஏற்பட்ட தி. மு. க. ஆட்சியில் சட்டப் பேரவை உறுப்பினராயிருந்த வழக்குரைஞர் திரு ஏ. எல். சுப்பிரமணியம், பி ஏ., பி.எல். அவர்கள் தம்மிடம் சொன்னதாக ஒரு கூட்டத்தில் பேசினர்.

நெல்லையில் நடைபெற்ற கூட்டங்கட்குச் சென்னையிலிருந்து தமிழ்க் கொடிகளும், தோரணங் கட்டுவதற்குப் பல வண்ணங்களில் அச்சிடப் பெற்ற தமிழக் கொடித் தாள்களும் 'இந்தி ஒழிக' 'தமிழ் வாழ்க' என்று அச்சிடப் பெற்ற தாள்களும் அனுப்பி வைக்கப்பெற்றன.

**செந்தமிழ்ச் செல்வியின் தொண்டு**

1936 முதல் இன்றுவரை இந்தி எங்ஙனமெல்லாம் நுழைக்கப் பெறுகின்றதென்பதும், இப்போதைய தமிழகவரசு அதனை எவ்வாறெல்லாம் தடைசெய்து வருகிறதென்பதும் செந்தமிழ்ச் செல்வியில் குறிப்பிடப் பெறுகின்றன. 'இந்தி எதிர்ப்புப் பிரசார நிலையம்' நிலையாக இருந்து இந்தியைப் பரப்புவதால் தமிழகத்தில் 'நிலையான இந்தி எதிர்ப்புக் கழகம்' இருக்க வேண்டுமென்பது எனது விருப்பம். அதைப்பற்றிய அறிக்கையொன்று 15—9—1968இல் தமிழ்ப் பாதுகாப்புக் கழக வழி அச்சிட்டு வெளியிடப் பெற்றது. அதன் கிளைகள் ஆந்திரம், கன்னடம், மலையாளம் ஆகிய அண்டை மாநிலங்களிலும் நிறுவப் பெறல் வேண்டுமென்பதும், அதற்கென இதழ் ஒன்று தமிழ், ஆங்கிலம், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் வெளியிடப் பெறல் வேண்டுமென்பதும் அவ்வறிக்கையிற் குறிக்கப் பெற்றுள்ளன.

**உலக இந்தி மொழி மாநாடு**

நம் தமிழ்மொழி பல்லாயிரம் ஆண்டுகட்கு முன் தோன்றி உலக நாகரிகத்திற்கு வித்திட்ட தொன்மை வாய்ந்த திருந்திய மொழி, பழந்தமிழ் இலக்கண இலக்கியங்களையுடைய மொழி என்பதனால் 'உலகத் தமிழ் மாநாடு' கோலாலம்பூர், சென்னை, பாரிசு, யாழ்ப்பாணம் ஆகிய நான்கு ஊர்களிலும் மிகவுஞ் சிறப்பாக நடைபெற்றது. அதைப் பார்த்து 'உலக சமஸ்கிருத மாநாடு' நடத்துவதெனப் பேசப்பட்டது. இப்போது வருகிற சனவரியில் நாகபுரி (Nagpur)யில் 'உலக இந்தி மொழி மாநாடு' நடைபெறும் என்று இதழ்களிற் காணப்பெறுகிறது.

*"கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி*
*தானு மதுவாகப் பாவித்துத்—தானுந்தன்*
*பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே"*

என்னும் 'மூதுரை'யை நினைவூட்டி அமைதியுறுவோம்.

சென்னைத் தமிழ்ப் பாதுகாப்புக் கழகமும் நெல்லைத் தமிழ்ப் பாதுகாப்புச் சங்கமும் இந்தி எதிர்ப்புக்கு ஆற்றிய தொண்டினைத் தமிழ் அறிஞர்கள் அறியும்பொருட்டே இங்கே விளக்கி எழுதியுள்ளேன்.

திரு மா. இளஞ்செழியன் எழுதிய 'தமிழன் தொடுத்த போர்', என்பதும் 1965இல் தவத்திரு ஈழத்தடிகள் எழுதிய 'இந்தி எதிர்ப்பு அன்றும் இன்றும்' என்பதும் 1966இல் திரு ஆலடி அருணா எழுதிய 'இந்தி ஏகாதிபத்தியம்' என்பதும் இந்தி எதிர்ப்பியக்க வரலாற்றைக் கூறும் நூல்களாகும்.

— வ. சு.

# ‘ முளவுமா ’

## ஆய்வின் மேல் ஆய்வு

[ புலவர் இரா. இளங்குமரன் ]

முளவுமா என்பது முள்ளம்பன்றி என்றே உரையாசிரியர்களும், [1]நூலாசிரியர்களுள் சிலரும் எழுதினர். ஆராய்ச்சியாளர்களும் அவ்வாறே கருதினர். ஆனால், “முளவுமா முள்ளம் பன்றியன்று; முள்ளம் பன்றியாயின் இலக்கண முறைப்படி ‘முண்மா’ என்றே வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும்” என்று திரு. இரா. மதிவாணனார் (எம்.ஏ , பி. எட்) நிறுவினர். ஆனால், அவர்கள் ‘முளவுமா முயலே’ என்றும் வலியுறுத்தினர். (செந்தமிழ்ச் செல்வி 48 : 622) முளவுமா முயல்தானா? பிறிதொன்றா? என்பதை ஆய்வதே இவ் ஆய்வின் மேல் ஆய்வாகும்.

“சல்லியம் முளவுமாஎய் சல்லகம் முட்பன்றிப்பேர்”

எனச் சூடாமணி நிகண்டு சொல்கின்றது. ஆனால், முதல் நிகண்டு நூலாகிய திவாகரம்,

‘எய்யே முண்மா சல்லியம் முட்பன்றி”

என்றே மொழிகின்றது. திவாகரர் கூறிய முண்மாவை விடுத்து, இலக்கியங்களில் பெருக வழங்கிய முளவுமாவையும் முண்மாவையும் ஒன்றே என மயங்கக் கொண்டு சூடாமணியார் தம் நூலை இயற்றியிருத்தல் வேண்டும். ஆனால், திவாகரர் கருத்து அஃதன்று என்பது வெளிப்படை. இனி, அவர் முண்மாவைக் கூறியது போல் முளவுமாவையும் தனியே ஓதியிருப்பாராயின் மயங்க நேர்ந்திருக்காது. அவர் முளவுமாவைக் குறித்தாரல்லர். ஆகலின், பலரும் மயங்க இடனாயிற்று. இவ்வாருக, முண்மா முட்பன்றி என்பது (எய்ப்பன்றி என்பதுவும்) தெளிவு. முளவுமா என்பது யாது ?

[2]மா, மான் என்பன விலங்கின் பொதுப்பெயர் சுட்டியும் வருவன. [3]அரிமா, [4]பரிமா, [5]கரிமா, [6]நரிமா என்பனவும்,

---

1. “மூண்டெழு சினத்துச் செங்கண் முளவுமுள் அரிந்து” —பெரிய. கண். 20.
2. “மாவும் மானும் விலங்கின் பொதுப்பெயர்” —திவாகரம்.
3. பட். 298. நற் 112 கலி. 103. நாலடி, 142, 152, 198. சிலப். 26 : 188.
4. கலி. 103 நாலடி. 149.
5. சிலப். 26 : 189
6. நாலடி. 152.

[1]அரிமான் என்பதுவும் காண்க. இவற்றுடன் வயமா, மருண்மா, கைம்மா, கோட்டுமா, பாய்மா, ஆமா, மானமா, கவரிமா, கருமா, முண்மா எனப் பல்வேறு விலங்குகளும் வழங்கின. உடும்பு, கீரி, முயல் முதலியன 'மா' என்னும் பொதுப் பெயருடன் ஆளப்பெற்றன அல்ல. ஆகலின் விலங்கினுள்ளும் ஒரு சாரனவற்றையே மா, மான் என்னும் பெயரால் முன்னோர் வழங்கினர் என்பது போதரும். ஆதலால், 'முளவுமா' என்பது முயல் ஆகுமா ?

முயல் முல்லைநிலக் கருப்பொருள் என்பது வெளிப்படை. சான்றாக நற்றிணை 59 அகம் 284, 394 காண்க. முளவுமா குறிஞ்சிக் கருப்பொருள் என்பது அகம் 182, நற்றிணை 85,285 ஆகியவற்றால் நன்கு புலனும்.

இனி முயல் [2]புன்புலத்தது (முல்லை, புறவு) என அகம், 394. ஐங். 421 ஆகிய பாடல்கள் கூறும். முயல் [3]ஊருள் வருதலும் முன்றிலில் திரிதலும் அகம். 284, புறம். 328, 333, 334 ஆகிய பாடல்களால் விளங்கும். இவ்வண்ணம் முளவுமா யாண்டும் குறிக்கப் பெற்றதில்லை என்பது கருதத் தக்கது.

இனி முயலை [4]வலை மாட்டியும், [5]வளைதடியால் எறிந்து தாக்கியும் வீழ்த்துதல் வழக்கம். [6]அம்பால் முயலை வீழ்த்துதல்

---

1. பதிற். 12, 83. கலி. 15. சிலப். 12; 20.
2. "குறுமுயல், மன்ற இரும்புதல் ஒளிக்கும் புன்புலம்"
"நறும்பூம் புறவின் ஒடுங்கு முயல் இரியும் புன்புலம்"
3. "குறுமுயல்...முன்றிற் சிறுசிறை நீர்கண்டுண்ணும்"
"முயல் வந்து கறிக்கும் முன்றில்"
"குறுமுயல், உள்ளூர்க் குறும்புதற் றுள்ளுவன உகளும்"
"குறுமுயல், புன்றலைச் சிறுஅர் மன்றத் தார்ப்பிற்
படப் பொடுங்கும்மே"
4. "தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டிக்
குறுமுயல் போக்கற வளைஇ" —பெரும்பாண். 112-3
5. "எல்லுமுயலெறிந்த வேட்டுவன்"
—வளைதடியாலே முயலை எறிந்து பற்றிய வேட்டுவன்
—நற் 59
"மாலை வெண் காழ் காவலர் வீச
நறும்பூம் புறவின் ஒடுங்குமுயல் இரியும்"
—வெண் காழ் என்றது மாலைக் காலத்து முயலெறியும் தடியை.
—ஐங். 421
6. "கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது" —திருக். 272

அருகிக் காணப்பட்டதன்றிப் பெருமைக் குரியதாகவும் கொள்ளப் பெற்றதில்லை. [1] நாயால் வளைக்கச் செய்து முயலைக் கொள்ளுதலும் உண்டு. ஆகலின் முயல் வேட்டை எண்மை யானதே அல்லாமல் ஆடவர் பீடு வெளிப்படுத்துவதும் அன்றாம்.

முளவுமாவை வீழ்த்துதல் இத்துணை எளிதன்று. இதனை,

*"ஒட்டியல் பிழையா வயநாய் பிற்பட*
*வேட்டம் போகிய கானவன் காட்ட*
*குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர*
*முளவுமாத் தொலைச்சும் தண்குன்ற நாடன்"* —அகம். 182

என்றும்,

*"உரவுக்கணை,*
*வன்கைக் கானவன் வெஞ்சிலை வணக்கி*
*உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றை"* —நற். 285

என்றும்,

*"முளவுமாத் தொலைச்சிய முழுச்சொல் ஆடவர்"* —புறம். 325

என்றும் வருவனவற்றால் அறிக.

முளவுமான் கொழுங்குறை சிறுகுடிப்பகுக்கும் பெருமை யுடையதாம்.

*"கானவன் எய்த முளவுமான் கொழுங்குறை*
*தேங்கமழ் கதுப்பின் கொடிச்சி மகிழ்ந்துகொடு*
*காந்தளஞ் சிறுகுடிப் பகுக்கும்"* —நற். 85

இவ்வாறு பகுக்கும் பெருமை [5] குறுமுயற்கு இன்றாம்.

இனி முயலில் ஆண்முயல் பெண்முயல் உளவாயினும் ஆண் முயலை 'ஏற்றை' எனக் கூறும் வழக்கு இல்லை. சிலவற்றின் ஆண்களுக்கே ஏற்றை என்பது விதந்து கூறப்பெறும். அவ் வகையில் '**முளவுமான் ஏற்றை**' என வருவது (நற்.285) முயலி னின்று முளவுமா வேறுபட்டது என்பதைக் காட்டும்.

---

1. *"முயல் வேட்டெழுந்த முடுகுவிசைக் கதநாய்"* —நற். 252.
*"தீற்றாதோ, நாய்நட்டால் நல்ல முயல்"* —பழமொழி. 128.
2. முயலைக் குறிப்பிடும் இடத்தெல்லாம் பெரும்பாலும் குறு முயல் என்று ஆள்வதும், முளவுமாவினை அவ்வாறு ஓரிடத்தும் ஆளாமையும் காட்டப் பெற்ற சான்றுகளின் வழியே கருதுக.

முயலுக்கு வேறு பெயர் வழக்கில் இல்லை. 'சசம்' என ஒருபெயரை [1]நிகண்டுகள் கூறும். அது தமிழ்ப் பெயரன்று. முளவுமாவுக்கும் முளா, முளவு, முளவுமா, முளவுமான் என்னும் ஒரு வழிப் பெயரன்றிப் பிறபெயர் இன்று. இவ்வாருக முளவும் முயலும் ஒன்றே என்பது பொருந்துமாறில்லை.

இனி முல்லைத் திணைப்பாடலொன்றில்,

"உடும்பு கொலீஇ வரி நுணல் அகழ்ந்து
நெடுங்கோட்டுப் புற்றத் தீயல் கெண்டி
எல்லு முயல் எறிந்த வேட்டுவன்" —நற். 59

என்று முயலையும், குறிஞ்சித் திணைப்பாடலொன்றில்,

"ஒட்டியல் பிழைபா வயநாய் பிற்பட
வேட்டம் போகிய குறவன் காட்ட
குளவித் தன்புதல் குருதியொடு துயல்வர
முளமாத் தொலைச்சுங் குன்ற நாட" —அகம். 182

என்று முளவுமாவினையும் கபிலரே கூறியுள்ளமை இவ்விரண்டும் வெவ்வேறு உயிரிகள் என்பதை நன்கு வலியுறுத்தும். ஆயின் முளவுமா என்பது யாது?

'முளவுமா' இப்பொழுதும் அதன் திரிபுப் பெயராலேயே வழங்கப் பெறுகின்றது. அதன் பெயர் 'மிளா' என்பது.

மானினும் பரியதாய், உயரமானதாய், கால்கள் நீண்டதாய் ஒரு சார் மான் தோற்றமும் கழுதை வண்ணமும் உடையதாய் அமைந்தது மிளா. ஆண் மிளாவிற்குத் தோற்கொம்பும் உண்டு. நாய்களை ஏவிச் சுற்றி வளைத்து நெருக்கி வீழ்த்துவது இன்றும் உண்டு. வளைக்கப் பெற்ற மிளாவை வாளால் வீசி வீழ்த்துவதும், துப்பாக்கியால் சுட்டு வீழ்த்துவதும் இந்நாள் வழக்கு.

மானைப்போலவே அஞ்சியோடும் மிளா கூட்டமாக வாழும். ஒரு மிளாவைக் கொண்டு ஒரு சிற்றூரே பகுத்துண்ணும் முறையுண்டு. அவ்வளவு பரியது அது.

மிளா மேலைத் தொடரில் பெருக வாழ்கின்றது. உவர் மண்ணைத் தின்னலில் அதற்கு உவகை மிகுதி. ஆகலின்

1. "சசம் முயலென்று சாற்றப் படுமே" —திவாகரம்.
"சசம் முயலென்ன லாமே" —சூடாமணி.

அதனைத் தின்று நீர் அருந்த வரும் வழியை வேட்டையாடு வோர் எதிர்நோக்கியிருந்து வளைப்பர். தீயால் கரிந்து கிடக்கும் புல்லைத்தின்பதிலும், புதுத்தளிர் மேய்வதிலும் அதற்கு விருப்பு மிகுதி. ஆகலின் வேட்டையாடுவோர் காட்டைத் தீமூட்டி எரிப்பதும் காணக் கூடிய நிகழ்ச்சியே.

மிளாக்கள் நிரம்ப வாழும் மேலை மலைத்தொடரில் ஓரிடம் 'மிளாப்பாறை' என வழங்கப் பெறுகிறது. அது சிவகிரிக்கு மேல் பால் அமைந்துள்ளது. மிளாவின் குட்டியைப் பற்றி வீடுகளில் வளர்ப்பதை மலையடிவார ஊர்களில் காணலாம்.

'முளா' என்னும் பெயர் 'மிளா' என வழங்கப் பெறுதலில் மயங்கக் கூடிய தொன்றும் இன்று. மிளகுசாறு என்பது முளகு சாறு, மொளகு சாறு, மொளகுசாறு என நாட்டுப்புறங்களில் இந்நாளிலும் கேட்கக்கூடிய தன்றோ!

இனிக் கடமை (கடமா, கடமான்) என்பது காவற்காடுகளில் காணப்பட்டதால் (மிளை-காவற்காடு) அவ்விலங்கை மிளா என்ற ழைத்தனர் [1]என்பர். ஆனால் கடமையைக் குறிக்கும் சங்கப் பாடல் எதுவும் மிளையில் கடமை காணப்பட்டதாகக் குறிக்க வில்லை. மலைவாணர்தம் தோட்டப்பகுதிகளில் திரிந்ததாகக் குறிப்புண்டு. அவ்வியல்பு மான், பன்றி, யானை, புலி முதலிய பிறவற்றிற்கும் உண்டு. அன்றியும் கடமைக்கும் மிளாவுக்கும் தோற்றத்தில் பெருத்த வேறுபாடு உண்டு. கவடு பட்ட கொம்பு கடமைக் குண்டு; மிளாவின் ஆணுக்கே தோற்கொம் புண்டு. அதுவும் கவடுபடாதது. உடல் ஒப்புமையால் ஒரு சார் மரையானுடன் இனமென இணைக்கலாமே அன்றிக் கடமை யுடன் இணைத்தற்கு இயலாதது.

மிளாவாகிய முளவுமா கடமையினும் வேறுபட்ட தென்பதை,

> "வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை
> முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை"
>
> —மலை. 175-6.

என்பதாலும் அறியலாம். ஆக இக்கால மிளாவே, சங்கச் சான்றோர் உரைத்த 'முளவுமா' என்பது தெளிவு.

———

1. சங்க இலக்கியத்தில் மான்கள். செந். செல். 41 : 33-43; 65-75.

## வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணியடிகள் வரலாற்றிற் சுவையான நிகழ்ச்சிகள் :

### 6. மோரும் சோறும் முகில்வண்ணன் தருதல்

[தி. செ. முருகதாச சுவாமிகள்]

ஓடத்தில் நேர்ந்த விபத்து நீக்கம் பற்றிய செய்தி யறிந்தோம். கடல் வழிப்பாதையில் இருண்ட இரவில், குடிவெறியில், செலுத்தினேர் என்பதும், திருவருள் அங்கு வாஞெலியாய்த் திருப்பியதும் ஓடம் பாறையில் மோதியதும், ஓட்டை விழுந்து ஏற்பட்ட பேரச்சமும், அவ்வேடீன, முருகன் அஞ்சற்க! உன் திருநீற்றுக் கோயில் (விபூதிப்பை) வடிவில் உடனுள்ளேன் என்ற தெய்விகமும் கண்டோம். அதன்பின் ஓடம் கரை சேர்ந்தது. சூரியன் ஒளிக்கதிர் கிழக்கே எழுந்தது. கைகூப்பி வணங்கினர் அடிகள். அச்சமகன்றனர். அவரவரும் தத்தம் இருப்பிடம் போகலாயினர். கருவப்படந்தை யென்ற ஊர் தெரிந்தது. அவ்வூர் வழி நடந்தனர். உடன் கிறித்தவரொருவரும் துணேயாஞர். தமிழறியாத இந் நாட்டில் தமிழ் பேசுபவராக உள்ளாரே என்று மகிழ்ந்தனர் அடிகள். இடைவழியில் தமது வழிபாட்டினே முடித்தனர். உண்ணும்படியான நிலேயில் தூய்மை எங்குமில்லே. முன்னிரவு அணுகியது. பெருவன மென்னும் பதியைச் சேர்ந்தனர். ஊரில் தங்க இடமும் கிடைத்திலது. உணவுமில்லே.

தாம் துறவு நிலேயிலிருப்பினும், தூய சைவமரபிற்ரேன்றியவர். உலக மக்களெல்லாம் கொல்லல், ஊன் உணவுண்ணலென்ற தீய வழக்கத்தை மாறச்செய்ய வேண்டிய கருணேயுள்ளமுடையவர். சைவரில்லம், அந்தணரில்லம் இவ்விடத்திலே உண்பவர். கேரளப் பகுதியில் அப்படியமைய வில்லே. நடந்து வந்த களேப்பு வேறு. பசியும் வருத்தியது. கால் வலியும் கூடியது. என் செய்வார் பாவம். அங்குக் கண்ட அந்தணச் சிறுவரிடம், கடை எங்கேயுள தென்றனர். அவர் அதிதூர மென்றனர். எமக்காகச் சென்று ஏதேனும் பழமாதியன வாங்கிவர முடியுமா என வினவினர். இகழ்ந்து பேசிச் சென்றனர். சரியென்று பணத்தைப் பெற்றுச் செல்லவில்லே. அஃது ஒரு நலமாயிற்று. இந் நிலேயில் அடிகட்கு ஓர் எண்ண முண்டாயிற்று.

"எல்லாவுயிர்கட்கும் ஏற்ற வுணவளித்துக் காக்கும் கடமையுள்ள கடவுள் ஒருவன் உண்டல்லவா! இன்றைய நாள் முழுதும் உணவின்றிப் பசியால் வருந்தும் இப்பாவம் அவனேப் போய்ச்

சேரட்டும்'' என்று உரக்கச்சொல்லி அருகிலிருந்த ஒரு பாழுஞ் சத்திரத்தை யணுகித் திண்ணையில் துயிலலானார்கள் இருவரும். இரண்டு நாழிகை நேரம் அயர்ச்சியிற் கண்ணுறங்கி விட்டனர். அந்நிசியில் ஓரந்தணர் அங்கே வந்தனர். வந்த அவர், 'இங்கே பசியால் துயிலும் பரதேசி யார்' என்று உரத்த குரலிற் கேட்டனர். அடிகள் துயிலகன்று இதோ இருக்கிறேன் என்று சொல்லினர். இதோ உணவு கொண்டு வந்துள்ளேன் பெறுக! என்றனர் அந்தணர். அடிகள் அவரை அணுகி வந்து கண்டனர். அடிகள் கூறுகின்றார். உணவு கிடைத்தால் போதுமென்று பெற்று உண்பவன் யானல்லன். அப்படி உண்பது விலங்கியல்பு. நீர் உள்ள இடம் தேவை. கைகால் அலம்பவும் அருந்தவும் நீர் வேண்டுமே என்றனர். வந்த அந்தணர் இதோ என்று அருகில் உள்ள கற்படியமைந்த குளமொன்றைக் காட்டினர்.

அந்தணர் ஒரு கையில் மலைவாழை யிலையில் வைத்த சோறு, ஈயக் கிண்ணத்தில் மோர் உப்பு இரண்டு பெரிய மோர் மிளகாய், இவற்றை யுதவினர். நான் இன்னும் பலருடன் உண்ணச் செல்வேன், விடை தருக! என்றனர் அந்தணர். அடிகட்கு வந்த வியப்புக் களவில்லை. இவன் மனிதனா! அல்லது தேவனா என ஐயுற்றனர். என்னால் நீங்கள் இவ்வளவு தூரம் சிரமப்பட்டது ஏன் என்றார் அடிகள். மாலையில் நீ ஏதோ சொல்லினை அது என் மனதை வருத்தியது. எனலும், உங்கள் நாடு எது என்றனர். இதன்று என்றார். சரி, பெயர் யாது என்றனர். சீநிவாசன் என்றனர் அந்தணர். முன் பின் அறியாத இந் நாட்டில் இவ்வளவு தூரம் இரக்கமனம் பெற்று உணவளிப்பவர்களும் உள்ளனரென் றெண்ணிக் கொண்டனர். திருவருள் வெளிப்பட்டாலும் நம்மைப்போல என்றெண்ணுவது தான் மனித இயல்பு. திருவருளே யென்று தெளிபவர் ஒரு சிலர் தாம். அவன் அவ்வுணர்வைத் தருதல் வேண்டும். **''காண்பாரார் கண்ணுதல் நீகாட்டாக்காலே''** என்பர் அப்பரடிகள். அந்த இருளிரவினும் தூய பஞ்சகச்ச வுடை—பூணூல்—திருநாமம், பொன்னிற மேனி—அடிகள் உள்ளத்தை ஈர்த்தது—தொட்டுப் பற்றிக் கொள்ளலாமா என்ற அன்பு மேலிட்டது. செய்யவில்லை. இவ்வளவு செய்ய முன் வந்த திருவருள் வெளிப்படும் காலமும் உண்டென் றமைந்தனர். அந்தணர் மறைந்தனர்.

திருநாவலூரர் திருக்கூடலையாற்றூரில் அந்தணராய்ச் சிவனளித்த உணவைப் பெற்றபின்தான் இறைவனென்றறிந்தனர். **''அடிகளிவ்வழி, போந்த அதிசயம் அறியேனே''** என்று

பாடினர். அதுபோல, தண்டபாணி யடிகளும். ஒரு வெண் பாக் கூறினர்.

> "குருவனப்புக் கண்டறியார் கொச்சிவள நாட்டின்
> பெருவனத்தில் என்னையன்பாற் பேணி—அருமையுடன்
> அன்னம் கொடுக்கவந்த அந்தணனே! அந்தவண்ணம்
> சொன்னம் கொடுக்கஒன்ரு தோ"

என்பதாகும்.

அந்தணர் மறைந்த பின்னர், தாம் குளத்தில் கைகால் தூய்மை செய்து, திருநீறணிந்து, மோருடன் சோற்றை விரவி இரு கூருக்கி ஒரு பகுதியை உண்டனர். மற்ருெரு பகுதியை உடன் வந்து உறங்கும் கிறித்தவ அன்பருக்கு வைத்து, உண்ணும்படி எழுப்பினர். அவர் உண்ண மறுத்தார். காரணம் திருநீறே பூசாத பண்பினர் அவர். அதை நிறையப் பூசியவர் அடிகள். இதை எண்ணி விட்டார். அவரெண்ண மறிந்த அடிகள், அடே இந்தத் தெய்வப்பிரசாதம் உனக் களிப்பது தவறு. பட்டினியால் வாடும் உயிர் என்ற மனித உணர்வினல் தரலானேன். திருவருள் பெற்ற ஒருவன் தோன்றி உன்னைச் சிவனெறியிற் சேர்க்கவும் கூடும். உன் தந்தை, அல்லது பாட்டன் எனது சைவநெறியிலிருந் தவனே யாகும் என்று கூறினர். பின்பு வணங்கினன். நீறு பூசச் செய்து உண்பித்தனர். இரவு தங்கி அவன் போயினன். இந் நிகழ்ச்சியினைக் கீழ்க்காணும் கவிகளால் அறியலாம். அளித்த சோறு—மோர் மிளகாய் எப்படிப்பட்ட தென்பதை அழகாகக் கூறியுள்ளார்.

> "ஒருகரத்திற் ருங்கும்மலை வாழையிலைச்
> சோற்றிடை;மற் ருெருகைமீது
> மருவுவங்கச் சட்டியில்மோர் பெய்திரண்டு
> பெருமிளகாய் வற்ற'லோ(டு) எவ்,
> உருசியினு மிக்கஉப்பும் கொடுத்தினிப்பல்
> வேதியரோடு உணப்போகின்றேன்
> தருதிவிடை யெனப்பெரிது விரைந்தான்
> அவ்வாச்சரியம் சாற்றற்பாற்ருே"

> "அன்னுனை மானிடனே தேவனே
> எனப்பெரிதாங் கையமெய்தி,
> என்னுல்நீ இச்சிரமம் எடுப்பானேன்
> எனக்கேட்டேன் யாதோநீமுன்
> சொன்னுயே எனச்சொன்னுன்; நீவசிக்கும்
> நாடிதுவோ சொல்களென்றேன்
> என்னுடை தல்லவென்ருன்; பெயர்கேட்டேன்
> சிவாசனெனச் சொன்னுன்".

"அங்காட்டுச் சத்திரத்தின் அழிசோறும்
புழுமோரும் அன்றன் றுண்மை
எங்காட்டு மிளகாயோ எட்டுவிரற்
கிடைநீள மிருந்ததுஉண்டி
உன்னுஅங் கிருவருக்கே வைத்திருந்த(து)
ஒருபாதி உண்ட பின்என்
தன்னுள்போல் வந்துள்ளான் றனையெழுப்பி
அருந்தும்வண்ணம் சாற்றி னேனால்".

"அங்கிருந்த புறச்சமய வேளாளன்
வேறுவழி யகன்று போனான்
சங்கின்நிறந் தரும்நீற்றுக் கோயில்தண்டம்
சுவடியெழுத் தாணி தாங்கி
மங்கிமட்கா மனவலியால் நடந்தேன்கால்
வலித்ததந்தோ வயலூர்க் குன்றில்
தங்கியகந் தப்பாவென் றொருகவி சொற்
றவ்வழியிற் றனிசென் றேனே"

என வருவதாகும்.

இவ்விவரம், தண்டபாணி சுவாமிகள் 'பிள்ளைத் தமிழ்' என்று யானியற்றிய நூலில், சப்பாணிப் பருவத்தில் ஒரு பாடலுண்டு. அந்தணராகவந்த திருமால் உதவிய (ததியோதனம்) மோர்ச்சோறு பெற்ற உம்முடைய கரங்களாற் சப்பாணி கொட்டுகஎன்பது கருத்து.

"கொதிநீ ரலைக்கடற் காயலிடை வள்ளமேற்
கொண்டுசெலும் நாளில் மதியம்
குலவிடா நள்ளிரவில் ஓடம்விடு வோர்மதுக்
குடிவெறியி னார்கள் உடனு
வதிவோர் உயிர்த்தொகை வதைத்தூன் உணும்கொடியர்
வன்கலத்(து) ஓட்டை யொன்று
மருவிநீர் உட்புகக் கலையால் அடைத்(து)இதயம்
மருவும்சிட் டையில்வி ளங்கத்
துதிவேள்வெண் ணீற்றுப்பை வடிவாய்உ ளேன்எனல்
துலக்கவன் கரையி லேகித்
தொல்பெருவ னப்பதியின் இரவுபசி நீங்கிடத்
துளவமால் பனவன் உருவாய்த்
ததியோ தனந்தரப் பெற்றகைத் துணைகொண்டு
சப்பாணி கொட்டி யருளே
தண்டபா ணிப்பெயர்மெய் கொண்டமா தைக்குரவ
சப்பாணி கொட்டி யருளே".

---

# ஆப்பிரிக்கச் சுற்றுலா

[கவியோகி சுத்தானந்த பாரதியார்]

(சிலம்பு ௪அ, பரல் ௧௨இன் தொடர்ச்சி)

## 19. கிம்பர்லி

தக தக—மினு மினு பளபளா—பளிச்—வைரங்கள் டால் வீசிப் பொலிகின்றன—விமானத்தில் வட்டமிட்டு இறங்கும்போது ஆயிரம் கறுந்தொழிலாளிகள் வைரச் சுரங்க ஆழத்திலிருந்து மேலே மணிக்கற்களை அனுப்புவதும், அவற்றை ஆயிரம் பெண்கள் இழுத்துச் சுமந்து செல்வதும், அவர்களைச் சில வெள்ளையர் ஆணையிட்டுக் கோலை ஓச்சுவதும் புலனுகும்—. விமானம் நிலையத்தில் இறங்கி ஒரு வழியைத் துருவி, டக்கென்று நிற்கிறது; ஏணி யிணைத்ததும் நிலையத்தைக் காண்கிறேன். அதோ அபிரகாம், மோதிபாய், சுகலால், வள்ளல் ஜி. என். நாயுடு—ஜகதாம்பாள், லிபரல்சாலமன்—ஆகியோர் வரவேற்கின்றனர். விமான நிலையத்திலிருந்து ஊரைச் சுற்றிக் காட்டி முதலில் திவ்விய ஜீவன சங்கத்தில் வரவேற்றனர். இசைக் கருவிகளுடன் அரைமணி சொற்பொழிவு; பிறகு நேரே குஜராத் செல்வர் வீட்டில் வசதியாக எனக்கு இடம் செய்தனர். அந்த வீட்டுக் கணவன் மனைவியருக்கு மக்கட்பேறு இல்லை. அவர்களுக்கு மந்திர உபதேசம் செய்தேன். ஓமம் வளர்த்தேன். அவர்கள் எல்லாப் பொருள்களையும் அணியணியாக வைத்து விற்று ஊதியம் பெற்றுச் செழிக்கின்றனர். அவ்வாறே இன்னும் சில மார்வாடிகளும் இவர்கள் வாணிகத்தில் இம்மிக் கணக்குப் பார்ப்பார்கள். பணத்தின் பால் நீங்கள் செய்த பாபங்களை நினைக. பத்தில் ஒரு பங்கு புண்ணிய நல்வினை புரிக என்றேன். பணம் கைக்கு வரும்போது, பசக்கென்று பைக்குள் சென்று பெட்டகத்துள் புகுந்து சிறைப்படுகிறது. வருவதும் தருவதுமான செல்வமே வளர்ச்சி பெறும். இதை அறிந்த வள்ளல் ஒருவர் G. N நாயுடு, 51 வாரன் தெரு, கிம்பர்லி. இவர் குடும்பம் அந்தக் காலம் மகாத்மா காந்திக்கு உதவியது. இவர் அறிவும் திருவும் அன்பும் ஆற்றலும் ஆக்கமும் ஊக்கமும் கொண்டவர். இவரே என் திருமுறை மொழி பெயர்ப்பை வெளியிட்டவர். இவர் அழகான காந்தி மண்டபமும் சிவமுருகாலயமும் அமைத்து பக்தி சாதனம் செய்கிருர். இவர் கோயிலின் சந்நிதி ஆவேசம் அளிப்பதாகும். மாலைக் கூட்டம் அங்கே சிறப்பாக நடந்தது. ஜகதாம்பாள் வரவேற்று மாலை சூட்டினுள்—. நல்லிசை முழங்கியது; நான் சிவமுருக சித்தாந்தம் பற்றிச் சிறப்பாகப் பேசினேன்... இரவில் அன்பர் பலர் என்னைக் கண்டு ஐயப்பாடுகளை நீக்கிக் கொண்டனர். மறுநாள் பெரிய கூட்டம். கேள்விகள் பறந்தன.

அனைத்திற்கும் தக்க சமாதானம் சொன்னேன். உணவுக்குத் பிறகு யூதக்கோயில் புகுந்தோம்—பிறகு நேராக வைரச்சுரங்கம் அழைத்துச் சென்றது.

கிம்பர்லி வைரச்சுரங்கம் உழைப்பின் உள்ளரங்கம். அதன் நடை முறைகள் எல்லாம் வெள்ளையர் கடன் முறைகளே. அவர்கள் மிக மிக அன்புடன் என்னை வரவேற்று வைரம் எடுக்கும் கடுமையான உழைப்பைக் காட்டினர். ஆரஞ்சு—வால் ஆற்றங்கரையில் மிஸ்டர் ரோட்ஸ் என்பவர் ஆழ அகழ்ந்து முதலில் வைரமணிக் கற்களைக்கண்டு பிடித்தார். அவர் பாறை களைக் குடைந்து குடைந்து உள்ளே சென்று மணிக்கற்களை எடுத்துச் செப்பனிட்டார். மிஸ்டர் எர்னஸ்டும் மிஸ்டர் ஹாரியும் டி பேர்ஸ் (De pers) சுரங்கத்திலும் இன்னும் நான் கைந்து இடங்களிலும் 400 மீட்டர்கள் பாறையைத் தோண்டி, வாளிகளை இணைத்து வைரக்கற்களைக் கொத்தி யெடுத்து நிரப்பி மேலே இழுத்து வைரங்களைப் பிரிக்கப் புலவர்களிடம் அனுப்பும் வேலை மிகக் கடினமானது. கண்ணீர் தருவது. ஆழக் கிணறு களில் நீருக்கு அடியே மூச்சுப்பிடித்து நின்று, பாதைகளில் தொளை போட்டு வைரத்தை எடுத்தல் இந்திய—பண்டு உழைப் பாளிகளாலேதான் முடியும். ஆழக் கிணறுகளுள் மூழ்கி மூச்சுத் திணறப் பாறைகளைப் பிளந்து வைரக்கற்களைச் சேர்த்து செய் நேர்த்திக்கு அனுப்பிப் பளபள வைரமணிகளாக்கிச் சந்தையில் விற்பதற்குள்—அப்பாடீ என்றாய் விடும்—அவ்வளவு இடர்ப் பட்டுழைத்து வைரங்கள் அழகின் மேனியில் மினுக்குகின்றன.

வெண்மணிப் புலவர் வைரங்களைச் செப்பனிடும் பான் மையை நேரே காட்டி எனக்கும் ஒரு வைரக்கல் அளித்தனர். அதை அவர்கள் காட்சி சாலைக்கே அன்பளித்து நன்றி கூறித் திரும்பினேன். கேப் டவுனிலிருந்து ஜோஹான்ஸ்பர்கு வரையில் இவ்வாறு வைரமணிச் சுரங்கங்கள் உள்ளன.

அன்பர் பலர் தம் வீடுகளுக்கு அழைத்து உபசரித்தனர். வீடுகள் வழுவழுப்பா யுள்ளன; நல்ல உணவு உண்டு; உடை யணிகள் காலத்திற்கேற்றபடி அமைந்துள்ளன. ஆனால் அமைதிதான் மனதில் மலரவேண்டும். அனைவருக்கும் தியான சாதனம் தந்து மலர் கனிகளைப் பொழிந்து — நேராக விமானத்திற்குச் சென்றோம். மூன்று மணிக்கு ஜோஹான்ஸ் பர்கு—5 மணிக்கு டர்பான்—. விமானச் செலவு முழுவதும் லிபரல் சாலமன் கைவண்மையால் எய்தியது—

இவ்வாறு தென்னாப்பிரிக்கா முழுதும் சுற்றி இயன்ற தொண்டுகளைச் செய்தாயிற்று. இன்னும் பத்தே நாட்களில் ஓராண்டு வேலை முடியவேண்டும்—. படச்சுருள் வெகு விரை வாக ஓடுகிறது....... (தொடரும்)

# பஞ்சமரபு—சங்ககால இசைநூல்

(வீ. ப. கா. சொல்லழகன், இறையியல் கல்லூரி, மதுரை)

மதுரைப் புலவர்களின் கூடல்கால நூலாகிய 'பஞ்ச மரபு' எனும் சீரிய இசைநூல இன்று வெளி வந்துள்ளது. இஃது இறையருள் பொழிவால் தமிழர்க்குக் கிட்டியது. வேலம் பாளையம் இரா. தெய்வசிகாமணிப் புலவர்—தமிழ்ப் பற்றினர்; பல தொல் நூல்களைக் கண்ணெனக் காத்து வெளியிட்டவர்; இவர் பஞ்ச மரபு நூலையும் பார்த்துக் காத்துப் பதிப்பித்துள்ளார். இந்நூல் வெளிவரப், பொள்ளாச்சி வள்ளல் நா. மகாலிங்கம் பொருளுதவியும் பிற உதவிகளும் நல்கினுர். பண்ணுய்வு அண்ணல் ப. சுந்தரேசர், பாடலின் அடிகட்கு ஆங்காங்கு அடிக்குறிப்பு எழுதி விளக்கியுள்ளார். இம் மூவர்க்கும் பைந்தமிழ் இசையுலகு சிந்தை மகிழ்ந்து பாராட்டி நன்றி நவில் கின்றது.

பஞ்சமரபு, கடைத்தமிழ்க் கூடல் நூல் (சங்ககால நூல்), பஞ்சமரபு இசையியல் பஞ்சத்தைப் போக்குகிறது. தமிழிசைப் பகைவர்களைப் பஞ்சாய்ப் பறக்கடிக்கிறது. இஃது ஓர் இசையியல் கருவூலம்; பஞ்சமரபு, செல்வத்துள் செல்வம். இஃது ஐந்து மரபுகளைப் பற்றிக் கூறுவது: 1. இசை மரபு (யாழ், குழல், குரல் மரபுகள்), 2. வாச்சிய மரபுகள், 3. கூத்து மரபு, 4. அபிநய மரபு, 5. தாள மரபு என ஐந்து மரபு முறை களைக் கூறி விளக்கிச் செல்வதால்—பஞ்சமரபு எனப் பெயர் பெற்றது; இதற்கு ஐந்தொகை மரபு எனும் பெயருண்டு. இந் நூலை ஆக்கியவர் சேறையூர் அறிவனுர் என்னும் பெயர் பெற்ற மாபெரும் புலவர். நூல் முழுதும் 240 வெண்பாக்களால் ஆகியது; இப்போது 124 வெண்பாக்களே முதல் பாகத்தில் வெளியாகி யுள்ளன.

## இது கடைச்சங்ககாலத்து நூல்

1. அடியார்க்கு நல்லார் பாராட்டு:

*சிலப்பதிகாரத்திற்கு* உரை எழுதுவதற்குத் தமக்குதவியாக இருந்த நூல்கள் ஐந்து என அடியார்க்கு நல்லார் அறிவிக் கின்ருர். அவை: 1. இசை நுணுக்கம், 2. இந்திர காளியம், 3. பஞ்சமரபு, 4. பரத சேனுபதியம், 5. மதி வாணர் நாடகத் தமிழ் நூல். இந் நூல்களைத் துணை கொண்டே அடியார்க்கு நல்லார் எழில் உரை எழுதுகின்ருர்.

பஞ்சமரபின் நூலாசிரியர்—அறிவனார் என்றும் கூறுகின்றார். அந்த உரையாசிரிய நல்லார் பஞ்சமரபுப் பகுதிகளினின்றும் முப்பது வெண்பாக்களை ஆங்காங்கு மேற்கோளாகச் சுட்டு கின்றார். அரும்பத உரைகாரர் எனும் மற்றோர் ஆசிரியரும் பஞ்சமரபு நூலை நன்கு பயன்படுத்தி இசைச் செய்திகளை இனிது விளக்கி யுள்ளார். ஆகையால்—பஞ்சமரபு மிகப் பழைய நூல் என்பது துணிபு. இனி அதன் காலத்தைத் திட்டமாய் வரை யறுப்போம். பஞ்சமரபு கடைச்சங்க காலத்தது என்பதற்குரிய சான்றுகள் கீழே தரப்பட்டுள்ளன.

## கடைச்சங்க காலநூல்

பஞ்சமரபு நூலின் முதல் மரபு—இசைமரபு. இசைமரபின் முப்பகுதியுள் முதற்பகுதி யாழ்மரபு. எனவே நூலின் தொடக் கத்தில் சிவபெருமானைக் காக்குமாறு வேண்டும் காப்புப் பாடல் அமைந்துள்ளது. அதற்கு அடுத்த செய்யுளிலேயே ஒரு மன்னனை முன்னிலைப்படுத்துகின்றார் அறிவனார். அதே மன்னனை முன்னிலைப் படுத்தியன 9 இடங்களில் காணப்படு கின்றன :

(அ) மன்னன் திருமாற!

(ஆ) வண்கூடற் கோமானே!

இம்முன்னிலையால் அறிவன யாவை? இங்குக் குறிக்கப் பட்ட திருமாறன் மதுரை மன்னன் ; இவன் முடத் திருமாறன் எனப் பட்டவன் ; முதலில் கபாடபுரத்திலிருந்து பாண்டிய நாட்டை ஆண்டவன். பின்னர் இரண்டாம் கடல்கோளில் உயிர் தப்பிக் கரையேறி மதுரையை அமைத்து ஆண்டவன். எனவே "வண் கூடற் கோமான்" எனப்பட்டான். இவன் மதுரையில் புலவர் கூடல் நிறுவியவன். எனவே வண்கூடல் கோமான் எனப் பட்டான்.

**2. புலவரால் போற்றப்பட்டவன் திருமாறன் :**

"அருங்கடைச் சங்க மிருந்தோர் யார் எனில் சிறுமேதாவி யர், சேந்தம் பூதனார், பெருங்குன்றூர்க் கிழார், பாடல் சான்ற இளந்திருமாறன்"—என்று கடைச்சங்க வரலாறு கூறுகிறது. எனவே அந்தத் திருமாறன் காலத்தில் அவன் முன்னிலையில் பஞ்சமரபு அரங்கேற்றம் பெற்றது என்பது தெளியலாகும். இத் திருமாறன் தமிழ்ப் பற்றினன். தமிழ் வளர்த்தவன் ஆதலால் 'பாடல் சான்ற இளந்திரு மாறன்' எனப் பாராட்டப்

பட்டுள்ளான். அவனை ஆடுஉ முன்னிலை யாக்கிய நூல் பஞ்ச மரபு. எனவே அவன் காலத்தது; கடைச்சங்க காலத்தது. கி. மு. 2 முதல் கி. பி. 2 ஆம் நூற்றாண்டுக் கிடைப்பட்ட நூல்.

3. ஐந்தொகை மரபில் திருமாறனைச் சுட்டிய பிற இடங்கள்:

(இ) மணி மாடம் ஓங்கும் மதுரையார் கோவே—(வகை ஒழிபு மரபு).

(ஈ) பொதிய மலைத் தென்னன்!

(உ) புயல் தணித்த தீரா. (கடல்கோள் குறிப்பு)

(ஊ) திருமடந்தை மன்னா.

(ஊ) இந்து வழிவந்த மாற.

(எ) வழுதியர் கோவே. (வகை ஒழிபு மரபு)

(ஐ) நண்ணிய மன்னர்க்கு மண் கொடுத்து மாற்றார்க்கு விண்கொடுத்த தென்னவர் கோமானே. (கண்ட மரபு)

எனவே ஒன்பது இடங்களில் மதுரை மன்னனையே சுட்டு கின்றது நூல். ஒருமுறையேனும் பல்லவ வர்மனை நூல் சுட்ட வில்லை. ஆயினும் வரலாற்று ஆராய்ச்சியாளர் மு. அருணா சலம்—'திருபதுங்கன் காலத்து நூல் பஞ்சமரபு' என நீண்ட தொரு கட்டுரையால் நிறுவியுள்ளார். அவர் கூற்றுப் பொருந் தாமைக் குரிய காரணம் பலப்பல. இங்குச் சில மட்டும் கூறு வோம்.

### ஒன்பதாம் நூற்றாண்டு நூல் என்பார்க்கு மறுப்புகள்

1. திரு. மு. அருணாசல ஆய்வாளர் நிறுவியது: "நிருப துங்க ராகம்"—எனப் புது ராகத்தைப் பஞ்சமரபு சுட்டுகிறது. இது காஞ்சியை ஆண்ட நிருபதுங்கவர்மனைச் சுட்டுவதால்—நூல் அவன் காலத்தது; அவன் கி. பி. 850—890 வரை ஆண்ட பல்லவ வர்மன்" என்று நிறுவுகிறார். என் வினா:—"நிருப துங்க ராகம்"—என யார் சுட்டியது? நூலை இயற்றிய அறிவனார் கூறவில்லை. நூலுக்குப் பிற்காலத்து உரை எழுதிய ஊர் பேர் தெரியாத ஓராசிரியர் நிருபதுங்க ராகம் என உரையுள் கூறி யுள்ளார். உரை மிகமிகப் பிற்காலத்தது. அது கொண்டு காலம் நிறுவுவது எவ்வாறு பொருந்தும்?

(2) "நிருபதுங்க ராகம்"—எனும் பெயர் நிருபதுங்க வர்மன் என்னும் பல்லவன் பெயரடிப்படையில் அமையவில்லை. பண்கள் எல்லாம் எவற்றின் அடிப்படையில் பெயர் பெறுகின்

றன என்று பஞ்சமரபின் அறிவனரே ஒரு வெண்பாவில் விளக்கியுள்ளார். (75ஆம் பக்கம்). பண்கள் பெயர் பெறுமிடத்துப் பண்பாலும் வினையாலும், பாவாலும் நிலத்தினாலும் இந்நால் வகையினாலேயே பெயர் பெறுகின்றன என்றார். நிருபதுங்கராகம்-மிகத் தூய பண் எனப் பொருள் படுவதால்-இது பண்பின் அடியாகப் பெயர் பெற்றது. ''நிருபதுங்கராகம்''—அரசன் பெயரடியாகப் பெயர் பெற்றது என்று ஆய்வாளர் கூறியது அறிவனார் கருத்துக்கும் மரபுக்கும் பண்பகுப்பு நெறிமுறைக்கும் முரண்பட்டது.

(3) இனி உரையாசிரியர் பல பண்களையும் துங்கராகம் என ஈற்றுச் சொல்லால் சுட்டுவது இங்குக் கருதுதற்குரியது. மாதுங்க ராகம் ( பக். 33) சூர்துங்கீராகம் (பக். 34, 37) எனச் சுட்டப்பட்டுள்ளது போன்று—'நிருபதுங்க ராகம்' எனச் சுட்டப்பட்டது. 'வராடி' எனும் ஈற்றுச் சொல்லால் பல பண்கள் பெயர் பெற்றுள்ளன. தீப வராடி, திவ்விய வராடி, பெரிய வராடி, சோக வராடி எனவும், பையுள் காஞ்சி, தனுக் காஞ்சி எனவும், ராமக்கிரி, தேசக்கிரி எனவும் இன்னும் பல பண்கள் ஈற்றில் ஒரே சொல்லால் பெயர் பெற்றுள்ளனபோன்றே —''துங்கம்'' தூய்மைப் பொருளில் ஈற்றுப் பெயராயிற்று. ஈற்றுப் பெயருக்கு முன்னடைமொழிகள் மட்டும் வேறுபடுகின்றன.

(4) இனி ''நிருபதுங்க ராகம்'' என்றது எது ? அது புது ராகமன்று; மிகப் பழைய ராகமே. குடந்தைப் பண்ணாய்வாளர் —ப. சுந்தரேசர் கூறுவது : விளரிப் பாலையே-நிருபதுங்கராகம். சீர்கோடி ராகம், கோடிகராகம், எனப் பல பெயர்கள் பெற்றது. அது இன்று பாடும் தோடிராகமே. தோடியே—நிருபதுங்கராகம் எனப் பெயர் பெற்றது எனக் குறித்துள்ளார் பண்ணாய்வு வித்தகர். குரல்குரலாயது—செம்பாலை (அரிகாம்போதி). இதுவே—விளரியைக் குரலாக்கி-இடம் பெயர்த்தமைத்தால்— (அதாவது தைவதத்தைச் சட்சமமாகக்கொண்டு கிரக பேதம் செய்தால்) வருவது விளரிப் பண்ணே. அதுவே தோடி, இது ச, ரி, க, ம, ப, த, நி, என ஏழு கோவைகளும் முதன்வீட்டுக் கோவைகளாக (சுத்த சுவரங்களாக) இடம் பெறுவதால்—இது மிகத் துங்கராகம் எனப் போற்றப்பட்டது. (துங்கம்-சுத்தம்)

(5) துங்கம் என்பதை அறிவனார் ''தூய்மை'' சுட்டப் பல இடத்தில் பயன்படுத்தியுள்ளார். ''துங்கமாம் யாழிசை'' (பக். 21.) ''தமிழ்த்துங்க வெழுத்து ஏழ்நரம்பு'' (பக். 74) என இன்னும் சில இடத்தும் சுட்டுவதெல்லாம் தூய்மைப்பொருளது

போல்—"துங்கராகம்" என்பதும் தூய்மை சுட்டுவதே. (சுத்த சுவரம் ஒலிப்பது)

எனவே இதுகாறும் கூறியதால் அறிவன: (1) "நிருபதுங்கராகம்"—என நாலாசிரியர் சுட்டவில்லை. பிற்கால உரையாசிரியரே என்பதாலும் (2) நூலுள் மதுரை மன்னனையே ஒன்பது முறை விளியாகச் சுட்டுவதாலும் பல்லவவர்மனை ஒருமுறையும் முன்னிலைப்படுத்தவில்லை ஆதலாலும், (3) நிருப துங்க என்பது பண்பால் பெற்ற பெயராதலாலும், (4) "கூடல் திருமாற" எனத் தெளிவாக எடுத்த எடுப்பிலே முன்னிலை யாக்கிச் சுட்டியுள்ளதாலும், திருமாறன் கடைச்சங்கம் நிறுவியவ னுதலாலும்—பஞ்சமரபு, திருமாறனின் காலமேயாகும். மேலும் (5) இறுதியாக, ஓர் உறுதியான சான்று: கடைக் கூடல் காலத்தவரே அறிவனர் என்பதற்குச் சான்று; பண்கள் பெயர் பெறுமிடத்துப் பண்பாலும் வினையாலும் பாவாலும் நிலத்தினு லும் என நால்வகையால் பெயர் பெறும் என அறிவனர் விளக்குகின்ற வெண்பாவிலேயே—"மணிமாட மோங்கு மதுரையார் கோவே" என மதுரை வேந்தனை முன்னிலையாக்கிப் —பண்பால், கிரியையால், பாவால், நிலத்தால் பெயர் பெறும் பண்கள்" என விளக்குகின்றூர் அறிவனர். நிருபதுங்கராகம் என ஒரு பெயர் பெற்றிருக்குமேல்—இந்நால்வகை கூருது, ஐவகையன்றே கூறியிருப்பார்-துங்கவர்மனையன்றே முன்னி லைப் படுத்தியிருப்பார். அவ்வாறு கூருததால்—படுத்தாததால் —நிருபதுங்கன் காலத்தவர் அல்லர்; முன்னிலைப் படுத்திய திருமாறன் காலத்தவரே; கடைக்கூடல் காலத்தவரே.

II தொல்காப்பியர், வெண்பா இலக்கணம் கூறுவதால் ஐந்தொகை மரபு நூல்—வெண்பாவால் ஆக்கப்பட்டது ஏற்றற்குரியது; காலத்துட்படுவதே.

III சாளர பாணி முதலிய பண்களை உரையாசிரியர் தம்முடைய காலத்துப் பண்பெயர்கள் ஆதலால்—கூறுகிறூர். பண்கள் நூற்ருண்டு உருண்டோடுங்கால் வேறு வேறு பெயர்கள் பெற்றன. உரையாசிரியர் பிற்காலத்தவர்; தம் உரையில் சாளரபாணி போன்ற பண்களைச் சுட்டுகின்ருர்.

IV பஞ்சமரபு எனும் நூல் "ஐந்தொகை" எனும் நூலின் சுருக்க நூல். இது மிகவும் செல்வாக்குப் பெற்றிருந் தது; பெருவழக்குப் பெற்றது. அழியாமல் நின்று நிலவுவது. ஆனல் பல நாடக நூல்கள் அடியார்க்கு நல்லார் காலத்திலேயே அழிந்துவிட்டன; இசை நூல்கள் அழிந்து விட்டன. ஆனல்

பஞ்சமரபு-பெருவழக்குப் பெற்றிருந்ததால்-30 வெண்பாக்களை அடியார்க்கு நல்லார் சுட்டுகின்றார் சிலப்பதிகாரத்திலே. இதுமட்டுமன்று: சிலம்பு நூலிலும் உரையிலும் வரும் இசை நுணுக்கங்கள் பற்பல பஞ்சமரபோடு தொடர்புடையன; பஞ்சமரபால் விளக்கம் பெறுவன. சேந்தன் திவாகரம், பிங்கல நிகண்டு-சதுரகராதி முதலிய நூல்களில் விளக்கப்படும் இசை நுணுக்கச் செய்திகளுக்கும் பஞ்சமரபு தரும் செய்திகளுக்கும் நெருக்கமான பெருக்கமான மரபுத் தொடர்புள்ளதை நான் நன்கு காண்கிறேன். ஆகவே-சங்ககாலத்திலிருந்து-அழியாது அயராது - வீழாது - தாழாது - மறையாது மாறாது – இசை மரபுகள் வருகின்றன. வட இந்திய இசை நூல்களுக்கும் முதல் நூல்களாகத்-தமிழிசை நூல்கள் திகழ்ந்துள்ளன-எனும் செய்திகளை ஆன்மீக உள்ளுணர்வினாலும் அறிவுநெறி ஆய்வா லும் நன்குணர்ந்து கொள்ளலாம். தமிழிசையே-பண்டு இந்தியா முழுமையும் பரவியிருந்தது. பின்னர் மகமதியராட்சி யில் வட இந்தியா - இந்துசுதானி இசையைக் கண்டது. உருது மொழி இசைகலப்பால் இந்துசுதானி இசை தோன்றியது.

பஞ்சமரபுக்கு, ஐந்தொகை மரபு எனும் தமிழ்ப் பெயரும் இருந்தது; ஓரிரு இடைச் செருகல் வெண்பாக்கள் உள்ளன. அதுபற்றிப் பின்னர் ஆய்வோம். நூல் செய்திகளும் பாகுபாட்டமைப்பு நெறிமுறையும் படிக்கப் படிக்க இனிக் கின்றன.

---

## பண்ணின் வகைகள்

பண்கள் பலவகைப்படும். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் எனப் பெரும்பண்கள் ஐந்து. இவற்றின் வகையாகும் பண்கள் பல. இவற்றுள் பகற்பண்கள் முதலியனவும், அவ்வப் பொழுதிற்கமைந்த பண்களும், யாமங்களுக் குரியனவும் எனப் பலவகையுண்டு. புறநீர்மை முதலிய பன்னிரண்டு பண்கள் பகற்பண்கள் எனப்படும். தக்கராக முதலிய ஒன்பது பண்கள் இராப்பண்கள் எனப்படும். செவ்வழி முதல் மூன்று பொதுப் பண்களாம். காலைக்குரிய பண் மருதம். மாலைக்குரியது செவ்வழி என்பாரும் உளர்.

டாக்டர் உ. வே. சாமிநாதையர்
நல்லுரைக்கோவை III

# சேனாவரையரும் உரையாசிரியரும்

[பேராசிரியர், ஆ. சிவலிங்கனார், மயிலம்]

## (5) குறிப்புவினை*

### மரபு

குறிப்புவினை யென்பது காலத்தைக் குறிப்பாகக் காட்டும் வினை யென்பர். காலத்தை வெளிப்படையாகக் காட்டுவது தெரிநிலை வினை யென்பர். இப்படிக் காரணம் காட்டிக் கூறுவது தொல்காப்பியருக்குப் பிற்பட்ட உரையாசிரியர்கள் காலத் திருந்து வழங்கி வரும் மரபாகி விட்டது. உண்மையில் கூர்ந்து நோக்கின் அக் காரணம் பொருந்துவதில்லை யென்பது புலப் படும்.

### வினை யெனப்படுவது

வினைச் சொல் என்பது வினை நிகழ்ச்சியைத் தெரிவிக்கும் சொல் என்பதாம். உண்டான் என்ற சொல் உண்ணுதலாகிய தொழில் நிகழ்ந்ததைத் தெரிவித்தலின் அது வினைச் சொல் எனப்பட்டது. தொழில் நிகழ்ச்சியைத் தெரிவித்ததோடு காலத்தையும் (இறப்பு) தெரிவித்தது. எனவே, ஒரு வினைச் சொல் தொழில் நிகழ்ச்சியோடு காலத்தையும் காட்டும் எனக் கொள்ளலாம். பெயர்ச் சொல் வேற்றுமை யுருபு ஏற்பதுபோல வினைச்சொல் வேற்றுமை யுருபு ஏலாது.

> "வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
> நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"
>
> (தொல். சொல். 198.)

என்றார் ஆசிரியர்.

### இருவகை வினை

வினைச்சொல் காலத்தை வெளிப்படையாகவோ குறிப் பாகவோ உணர்த்தும். 'உண்டான்' என்ற சொல்லைக் கேட்ட மாத்திரத்தே அஃது இறந்த காலம் காட்டுவது புலப்படும்.

---

*அண்ணாமலைப் பல்கலைக் கழக மொழியியல் துறையினர் 1973 பிப்ரவரி 17, 18, 19ஆம் நாள்களில் நடத்திய 'தமிழ் இலக்கணக் கொள்கைகள்' பற்றிய கருத்தரங்குக்காக டாக்டர், கா. மீனாட்சி சுந்தரம் அவர்கள் எழுதிய 'குறிப்பு வினை' என்ற கட்டுரைக் கருத்தை முழுமையும் ஏற்று அதை வலியுறுத்த எழுதப்படுவது இக்கட்டுரை.

'பொன்னன்' என்பதைக் கேட்ட மாத்திரத்தில் காலம் உணர முடிய வில்லை. நேற்று, இன்று, நாளை யென்பனவற்றுள் ஒன்று சேர்த்தே உணர வேண்டி யுளது. இப்படி யுணர்வது குறிப்பால் உணர்வதாம். முன்னது 'தெரிநிலை வினை' யெனப் படும். பின்னது 'குறிப்பு வினை' எனப்படும்.

"இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ரு
அம்முக் காலமும் குறிப்பொடும் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே"

(தொல். சொல். 200)

என்ருர் ஆசிரியர்.

"வினைச் சொற்கள் தோன்றுமிடத்து இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற அம் முக்காலமும் வெளிப்படையாகக் கொள்வதே யன்றிக் குறிப்பாலும் கொள்ளும் பொருள் நிலையுடைய."

என்பது அதன் உரை.

## தொல்காப்பியர் கருத்து

வினைச் சொல் என்பது காலம் காட்டும் என்ற ஆசிரியர், அக் காலம் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் வரும் எனக் கூறலின், 'வினைச் சொல்லே வெளிப்படையாகவாவது குறிப் பாகவாவது காலம் காட்டும்' என்பது அவர் கருத்தாகக் கொள்ளலாம்.

வினைச் சொற்களைப் பிற்காலத்தார் பகுதி, விகுதி, இடை நிலை, சாரியை, சந்தி, விகாரம் எனப் பிரித்துக் காட்டியது போலத் தொல்காப்பியர் பிரித்துக் கூருமல், வினைச் சொல்லின் இறுதி பற்றி மட்டும் கூறிக் 'காலம் காட்டும் உறுப்பு இவை' என வரையறை செய்யாமையால் அவர்க்கு வினைச் சொல்லே தெரிநிலை குறிப்பு என்ற இரு நிலையிலும் காலம் காட்டும் என்பது கருத்தாகக் கொள்ளலாம்.

காலம் காட்டுவன இறுதிநிலை, இடைநிலை, சிலவற்றில் முதல் நிலை எனப் பிரித்துக் கண்டுணர்த்திய பின்னர்தான் வினைச் சொல் என்பது தெரிநிலை வினையாக வரின் அது வினை யடியாகவே வரும் என்பதும், குறிப்பு வினையாக வரின் அது பெயரடியாகவே வரும் என்பதும் பிரித்துக் காட்டப்பட்டன. 'உண்டான்' என்ற தெரிநிலை வினைக்கு 'உண்' என்பது வினையடி; 'பொன்னன்' என்ற குறிப்பு வினைக்குப் 'பொன்' என்பது பெயர் அடி எனக் காண வைத்தனர். இப்படிக் காண வில்லை தொல்காப்பியர்.

'அவன் உண்டான்' என்றவிடத்து 'உண்டான்' என்ற தெரிநிலை வினைச்சொற் போலவே, 'அவன் பொன்னன்' என்ற விடத்தும் 'பொன்னன்' என்பதையும் வினைச் சொல்லாகவே கொண்டார் ஆசிரியர். 'உண்டான்' என்பதில் காலம் வெளிப் படையாகத் தெரிகிறது. 'பொன்னன்' என்பதில் அப்படித் தெரியவில்லை. அதனால் 'உண்டான்' என்பதை 'வினை' என்றும், 'பொன்னன்' என்பதை 'வினைக் குறிப்பு' என்றும் கொண்டார். ஆசிரியர் தெரிநிலை வினை யென்றும் குறிப்பு வினை யென்றும் ஆளாமல், 'வினை' யென்றும் 'குறிப்பு' அல்லது 'வினைக் குறிப்பு' என்றும் ஆண்டார்.

**வினைக் குறிப்பு—பெயர்க் காரணம்**

சொற்கள் பெயர், வினை, இடை, உரி என நான்காம். பெயரிலும் சாராமல் வினையிலும் சாராமல்—ஆனால் இடை உரி போலவும் வாராமல் உள்ள சில சொற்களும் வழங்கப்படு கின்றன. அவை சொல்லால் பெயர் போலவும் பொருளால் வினை போலவும் காணப்படுவன. 'பொன்னன்' என்பதைப் பார்க்கின் பெயர்போல் காணப்படும். 'பொன்னையுடையவனாக இருக்கின்றான்' என்ற பொருளைப் பார்க்கின் வினையாகக் காணப்படும். இது பெயரிலும் சாராது வினையிலும் சாராது காணப்படுகிறது. 'எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே' என்பது ஆசிரியர் கருத்தாதலின், 'பொன்னன்' என்பதைப் பொருள் கொண்டே நோக்க வேண்டும் ஆதலின், அது வினை யின் பாற்படும் என்பது புலப்படும். அதனால் அதை நேரே வினை யென்னாமல் 'வினைக் குறிப்பு' என்னலாம் என்பது ஆசிரியர் கருத்தாம். அஃதாவது வினையாகக் குறிக்கப்படுவது வினைக் குறிப்பு எனக் காரணம் கொள்ளலாம்.

**டாக்டர், கா. மீனாட்சி சுந்தரம் அவர்கள்,**

> குறிப்பு வினைமுற்று பெயரிலிருந்து வேறுபட்டு நிற்கிறது; அதனால் அதற்கொரு தனிப்பெயர் தேவைப்படுகிறது. அதே போலத் தெரிநிலை வினைமுற்றிலிருந்து அது வேறுபடுகின்றது. ஆகவே அதிலிருந்து பிரித்துக் காட்டக் குறிப்பு வினைமுற்று என்ற பெயர் தேவையாகிறது. 'பொன்னன்' என்றால் பொன்னை யுடையனா யிருக்கும் தொழில் புலப்படுகின்றது. அதனால் அச் சொல் தொழின்மையுடைய சொல்லே.

என எழுதியது சாலப் பொருந்துவதாகும்.

**தடையும் விடையும்**

வினையாகக் குறிக்கப்படுவது வினைக்குறிப்பு என்று பெயர்க் காரணம் கூறின் அதில் வினை நிகழ்ச்சியுண்டா இல்லையா என்ற

ஐயம் தோன்றலாம். வினை நிகழ்ச்சி யுண்டு. அக் கருத்தில் தான் ஆசிரியர்,

"குறிப்பினும் வினையினும் நெறிப்படத் தோன்றிக்
காலமொடு வருஉம் வினைச்சொல் எல்லாம்"

(தொல். சொல். 201.)

என்றார். இதற்கு உரை யெழுதிய சேனாவரையர்,

"குறிப்புப் பொருண்மைக் கண்ணும் தொழிற் பொருண்மைக் கண்ணும் தோன்றிக் காலத் தொடுவரும் எல்லா வினைச் சொல்லும்"

என்றே எழுதினார். வினை யென்பதற்குத் 'தொழிற் பொருண்மை'யென்றெழுதியதால் குறிப்பு என்பதற்குக் 'குறிப்புப் பொருண்மை' என்றெழுதியதன் கருத்து 'குறிப்பாகக் கொள்ளும் தொழிற் பொருண்மை' என்பதாகவே கொள்ள வேண்டும். காலம் குறிப்பாகக் கொள்வது எனக் கொள்ள லாகாது. ஏன் எனின் மீண்டும் 'காலமொடு வருஉம்' என வருவது கூறியது கூறலாம். எனவே, ஆசிரியர் குறிப்பு என்று சொன்னது, 'காலத்தைக் கருதாமல் பொருள் கருதி வினையாகக் குறிக்கப்படும் சொல்லையே' என அறியலாம். அதனால் வினைக் குறிப்புச் சொல் காலம் காட்டும்போது வினைச் சொல் (உண்டான் முதலியன) போலத் தன்னகத்துக் காலம் காட்டும் உறுப்பு இல்லாமல் குறிப்பாகக் காட்டும் என்னலாம்.

இதுவரை கூறியவாற்றால் குறிப்புவினைக்குப் பெயர் வரத், தொழில் நிகழ்ச்சியைக் குறிப்பாகக் கொண்டது ஆதலின், வினை யாகக குறிக்கப்படுவது என்பது காரணமாகுமே தவிரக் காலத்தைக் குறிப்பாகக் காட்டுவது என்பது காரணம் ஆகாது என உணரலாம். தொழில் நிகழ்ச்சியே குறிப்பாக அமைதலின் காலமும் குறிப்பாக அமைவது அது; அவ்வளவே. இதற்கு ஆசிரியர் கூற்றிலிருந்தே சான்று காணலாம்.

**மேலும் சில சான்றுகள்**

(1) "அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்
கண்ணென் வேற்றுமை நிலத்தி னானும்
ஒப்பி னானும் பண்பி னானும் என்று
அப்பாற் காலம் குறிப்பொடு தோன்றும்"

(தொல். சொல். 218.)

என்ற நூற்பாவுக்குச் சேனாவரையர்,

"ஆறும் வேற்றுமையது உடைமைப் பொருட்கண்ணும் ஏழாம் வேற்றுமையது நிலப் பொருண்மைக் கண்ணும் ஒப்பின்கண்ணும் பண்பின்கண்ணும் என அப் பகுதிக் காலம் குறிப்பால் தோன்றும்"

என உரை யெழுதி,

"அப் பகுதிக் காலமாவது அப் பொருட் பகுதிபற்றி வரும் சொல்லகத்துக் காலமாம்; அப் பகுதிக் காலம் குறிப்பால் தோன்றும் எனவே அப் பொருள் பற்றி வினைக்குறிப்பு வரும் என்றவாறும்"

எனவும் எழுதினர். இவர் உரையிலிருந்து நாம் அறிவது, 'வினைக்குறிப்பு என்பது மேற்குறித்த நான்கு பொருள்பற்றி வரும் என்பதும், அப்படி வருவது குறிப்பாற் காலம் காட்டும் என்பதும் ஆம். எனவே தெரிநிலைவினையானது தொழில் நிகழ்ச்சியைக் குறித்தது போலவே, வினைக்குறிப்பு என்பதும் மேற்கூறிய நான்கு பொருள்பற்றிய தொழில் நிகழ்ச்சியைக் குறிப்பது என்பதும், தெரிநிலைவினை காலத்தைக் காட்டுவது போலவே வினைக்குறிப்பும் குறிப்பாற் காலத்தைக் காட்டும் என்பதும் பெறப்படும். அதனால் காலத்தைக் குறிப்பாற் காட்டுவதால் மட்டும் வினைக்குறிப்பு என்ற பெயர் வந்தது என்பது பொருத்தமில்லை.

இந் நால்வகைப் பொருள்பற்றிய தொழின்மையடிப்படையில் தோன்றுவதால் பிற்காலத்தார் பெயரடியாகத் தோன்றுவது குறிப்புவினை என்றதோடு குறிப்பாற் காலம் காட்டுவதால் அப் பெயர் பெற்றது என்றும் கூறினர் போலும்.

(2) "அன்மையின் இன்மையின் உண்மையின் வன்மையின்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்
என்ன கிளவியும் குறிப்பே காலம்" (தொல். சொல். 215.)

என்ற தொல்காப்பிய நூற்பாவும் வினைக்குறிப்பு என்பது ஒன்றுண்டு என முன்னர் நிறுத்திப் பின்னர் அது காலம் குறிப்பாற் காட்டும் என்று கூறியதாகும். "குறிப்பொடு கொள்ளும் என்ன கிளவியும்" என முன்னர்க் கூறிப் பின்னர் "குறிப்பே காலம்" என்றது காண்க. சேனாவரையரும் இக் கருத்துப்படவே உரையெழுதியுள்ளார். ஆனால் அவர் அந் நூற்பாவுரையின்கீழ்,

"காலம் குறிப்பால் உணரப்படும் எனவே இவையும் வினைக் குறிப்பாம் என்றவாறு"

எனவும் எழுதியுள்ளார். இத் தொடர் 'வினைக் குறிப்பு என்பதற்குக் காலம் குறிப்பால் உணரப்படுவதே காரணம்' என்பது

போலக் கூறியதாக அறிவிக்கும். இது சேனாவரையரின் மயக்கம் என்றே கொள்ளவேண்டும்.

அல்லது "அதுச் சொல் வேற்றுமை யுடைமையானும்" என்ற நூற்பாவின்கீழ், "அப் பகுதிக்காலம் குறிப்பால் தோன்றும் எனவே அப் பொருள்பற்றி வினைக்குறிப்பு வரும்" என்று எழுதியது போலவே "அன்மையின் இன்மையின்" என்ற நூற்பாவின் கீழும், "காலம் குறிப்பால் உணரப்படும் எனவே அன்மை முதலாகிய பொருள்பற்றி வினைக்குறிப்பு தோன்றும்" என்றெழுதியிருக்க வேண்டும்,

வினைக்குறிப்பு பற்றி யாண்டும் உரையாசிரியரைச் சேனா வரையர் மறுக்கவில்லையாதலின் இருவரும் ஒத்த கருத்தினரே என்னலாம். சேனாவரையர் உரைக் குறிப்பிலிருந்து அவர்க்கும், 'குறிப்புவினை என்பது வினையாகவே வருவது என்பதும், தொழின்மை காரணமாக வினையாகக் குறிக்கப்படுவது என்ற பெயர்க் காரணமே உடன்பாடு என்பதும்' இதுகாறும் கூறிய வற்றால் அறியலாம்.

(3) இறுதியாக ஒரு சான்று : வினைத்தொகை என்பது குறிப்பாற் காலம் காட்டுவதாகும். 'கொல் யானை' என்பது, 'கொன்ற யானை', 'கொல்லுகின்ற யானை', 'கொல்லும் யானை' என முக் காலத்துக்கும் பொதுவாய் இடத்துக்கேற்ப ஒரு காலத்தைக் காட்டும். அஃதாவது குறிப்பாகக் காலங் காட்டும். குறிப்பாகக் காலம் காட்டுதலின் குறிப்புவினை என்ற பெயர்க் காரணம் வந்ததாயின் குறிப்பாற் காலம் காட்டும் வினைத் தொகையையும் 'குறிப்புவினை' என்று சொல்லலாமோ ? அவ்வாறு சொல்லாமையின் குறிப்பாற் காலம் காட்டுதலின் குறிப்புவினை எனப் பெயர் பெற்றது என்பது பொருந்தாது.

---

## குறிப்புவினையாராய்ச்சி

*"குறிப்புவினை-சொல்வான் குறிப்பிற்கேற்பக் காலம் கொள்ளப் படும் வினைச்சொல். ஒருவன் பிறந்தபோதே அவனுக்குக் கரியன் என்று பெயர் வைக்கப்பட்டிருந்தால், அச்சொல் குறிப்பு வினை யாகாது. ஒருவன் செம்மை நிறமுடையனாகவிருந்து, பின் ஏதோ காரணத்தால் கருநிறமுடையனானல், அப்போது அவன் கரியன் என்றழைக்கப்பட்டால். அச்சொல் குறிப்பு வினையாகும்"*

—தொல். சொல். சேனா. விளக்கவுரை
(பக்கம். கo௪)

# அம்மை திருப்பள்ளியெழுச்சி

[குருகுலக் கவிஞர், சி. து. கன்னிசாமி, கண்டரச்சேரி]

பூத்தது கீழ்த்திசை பொன்னொளிக் கதிரோன்
புணரியின் முகட்டினில் எழுந்தனன் புலவோர்
நாத்தவழ் வாழ்த்தொலி நணுகிய திருள்போய்
நல்லொளி யலர்ந்தது நங்கைநின் புகழ்கள்
பாத்தொடுத் தேத்திடப் பைந்தமிழ் மாதர்
பண்ணிசை யாழொடும் படர்ந்தனர் காணாய்!
ஏத்துநர் இசைபெற இன்னருள் புரியும்
எழிலுமை யேபள்ளி யெழுந்தரு ளாயே. க

பள்ளநல் வயல்களில் மள்ளர்தம் பாடற்
பண்ணொடு தென்றலும் பயின்றது சோலைக்
கொள்ளையொண் குயிலினத் தமுதுகு கீதம்
கூடிய தெங்கணும் குழவியங் கன்றின்
தெள்விளிக் குருகின கறவைகள் ஆயர்
செலுத்திட அசைநடை செழித்தன பாராய்
பிள்ளையொண் கிள்ளையெம் பேரருள் உமையே
பெய்ம்முகி லேபள்ளி யெழுந்தரு ளாயே. உ

மைம்முகி லேயொளி மரகத மணியே!
மாணிக்க மேயென்றன் மனத்தொளி வடிவே!
அம்மையும் இம்மையும் அருள்செயுந் திருவே!
ஆரண நூற்பொருள் அலர்ந்திடும் தருவே!
வெம்மையிப் பவக்கடல் வென்றிட நினைவார்
வேண்டுவ அளித்திடும் வெண்ணகை யமிழ்தே!
எம்மைவந் தாண்டிட இரங்கிடும் உமையே
இளங்கிளி யேபள்ளி யெழுந்தரு ளாயே. ௩

காழியிற் பிள்ளையின் கசிவினை ஞானம்
கனிந்திடும் அமுதளித் தாண்டனை கடவூர்
வாழுமெய் யடியவர் வாய்மையைக் காப்பான்
மதியிருள் வான்மிசை மலர்ந்திடப் புரிந்தாய்

ஏழையென் மனத்துயர் ஏகிடப் புரிதல்
இறைவிநின் தண்ணருட் கியல்பது வன்றே!
ஊழிகள் கண்டிடும் ஒருபெருங் கூத்தன்
உயிரனை யாய்பள்ளி யெழுந்தரு ளாயே. ௪

இல்லையென் றொருவர்தம் எல்லையில் நடந்தே
இச்சகம் பேசிடும் இழிதக வோட்டி
நல்லவர் வாழ்த்திட நன்னெறி பிறழா
நறும்புகழ் மரபினில் நண்ணிநின் பாதம்
சொல்லுறும் புகழ்க்கவித் தொடையல்கள் சூட்டும்
தொண்டெனக் காக்கிய தோகைநல் லுமையே
எல்லையில் கருணையில் ஏழுல களிக்கும்
இன்னமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. ௫

விண்வெளி யேறினம் வெண்மதி யுலகில்
விரைந்தவண் உலவினம் வியத்தகு செயல்கள்
எண்ணில புரிந்தனம் இன்னமும் புதுமை
இயற்றுவ துண்டென இயம்புவர் மாந்தர்
மண்ணினில் ஒருமையில் வாழுவ தறியார்
மலருமுன் திருவருள் மாட்சியு முணரார்
கண்ணிலர் விழிபெறக் காட்டுதி யுமையே
கலைமயி லேபள்ளி யெழுந்தரு ளாயே. ௬

புன்மையர் பொய்ம்மையர் அரசியல் சூழ்ச்சிப்
புரட்டர்கள் உலகினைப் புதுக்குதும் என்பார்
அன்பிலர் தம்வயி றோம்புதல் ஒன்றே
ஆரண நெறியென அறிந்தனர் மிகுவார்
என்பெறும் நாடிதன் எதிர்வருங் காலம்
ஏதுறும் அறிந்திலம் இன்னருள் காட்டி
நன்னெறி நல்கிட நாடுக உமையே
நாரணி யேபள்ளி யெழுந்தரு ளாயே. ௭

வான்முதற் பூதமு மலர்ந்திடும் இயற்கை
மாட்சிகள் அனைத்துமுன் மணித்திரு வுருவே
தேன்மலி தமிழ்முதல் மொழிச்சுவை நீயே
செம்பொருள் நீயறச் சீர்த்தியும் நீயே

ஊன்மலி பிறவியும் உணர்வினில் ஓங்கி
    உயர்ந்திட அருள்புரி ஒளிவளர் தாயே
கான்மலி கொன்றையன் கண்மணி யுமையே
    காரணி யேபள்ளி யெழுந்தரு ளாயே. அ

சத்திநின் ஆற்றலிற் சத்தனின் றெழில்கள்
    தகுமுறை யுலகினில் தழைத்திடல் தோற்றி
முத்தெனும் பழமறை மொழிகுவ தோர்ந்தும்
    முரணுடை நெறிகளில் மூழ்கினர் தெளியார்
பித்தினிற் பேசுநர் பிதற்றுரை வேண்டேன்
    பிணைமலர்த் துணையடிப் பெருமைகள் பாடும்
இத்திறன் வளர்த்தெனை இரங்கிவந் தருளாய்
    எழில்முகி லேபள்ளி யெழுந்தரு ளாயே. கூ

வாழிநின் திருவருள் வாழிநின் அடியார்
    வாழிநன் மாமழை வளர்கநற் செந்நெல்
காழது தவிர்ந்துளம் கலந்திவண் மாந்தர்
    களிப்புடன் வாழ்ந்திடக் கனிகநின் கருணை
ஏழிசை ஓங்குக இனியநன் ஞானம்
    இவ்வுல கோங்கிட இயற்றுக புதுமை
ஏழைமை தவிர்ந்திட ஏற்றவை புரியும்
    எழிலுமை யேபள்ளி யெழுந்தரு ளாயே. க0

———

## மானே வருக வருகவே!

பொன்னே வருக மூவுலகும் பூத்தாய் வருக நாயேனைப்
    புரந்தாய் வருக வழுதியர்கோன் புதல்வி வருக முகிற்கிளைய
மின்னே வருக மெய்ஞ்ஞான விளக்கே வருக மறைநான்கின்
    விரிவே வருக பேரின்ப விளைவே வருக மிகுங்கருணை
அன்னே வருக அகநெகுவார்க் கனியே வருக அலர்மடவார்த்
    கரசே வருக உரைப்பருஞ்சீர் அம்மே வருக அமூற்கரத்து
மன்னேர் உடலம் பகிர்ந்தஇள மயிலே வருக வருகவே
    மதமா தங்க வனத்துமட மானே வருக வருகவே!

# திருவள்ளுவர் கோட்டம் கால்கோள் விழா

சென்னை நுங்கம்பாக்கத்தில் அமையவிருக்கும் திருவள்ளுவர் கோட்டத்திற்கான கால்கோள் விழா 18-9-1974இல் தமிழ் நாடு கல்வி அமைச்சர் மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது.

விழாவிற்கு வந்திருந்தவர்களைப் பொதுப்பணித்துறை அமைச்சர் மாண்புமிகு ப. உ. சண்முகம் அவர்கள் வரவேற்றார். நாவலர் அவர்களின் தலைமை உரைக்குப்பின் மொழி நூலறிஞர் தேவநேயப் பாவாணர், முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம், நல்வாழ்வுத்துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் அன்பழகன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

பின்னர் வள்ளுவர் கோட்டத்திற்கு அடிக்கல் நாட்டிச் சிற்பப் பணிகளைத் துவக்கிவைத்து முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் உரை யாற்றினார். அவ்வுரையில்,



"மக்களின் பிரச்சினைகளைக் கவனிக்கின்ற அதே நேரத்தில், ஒரு மரபு ஒரு சமுதாயத்தின் கலை—கலாச்சாரங்கள் பேணி, பாதுகாக்கப் பட வேண்டும், இந்த இரண்டு பொறுப்புக்களும் அரசுக்கு இருக்கின்ற காரணத்தினால்தான் இந்த வள்ளுவர் கோட்டத்தை இங்கே உருவாக்க முனைந்திருக்கிறோம்.

"இந்த வள்ளுவர் கோட்டத்தில் வெளிநாட்டிலே யிருந்துவந்து திருக்குறள் பயில விரும்பும் மாணவர்கள், தங்கிப் படிக்கிற வகையிலும், அவர்கள் மற்றவர்கட்குக் கற்றுக் கொடுக்கின்ற ஆற்றலைப் பெறுகின்ற வகையிலும் பயிற்சிக் கூடங்கள் அமையும்" என்று குறிப்பிட்டார்.

வட நாட்டிலுள்ள மதுராவில் பெருஞ்செல்வர் பிர்லா சலவைக் கல்லில் கட்டிய கீதா மண்டபத்தில் கீதை முழுதும்பொறிக்கப் பெற்றிருக் கிறது. அதேபோல் சென்னையில் திருவள்ளுவர்க்கு மண்டபம் அமைய வேண்டுமென்று 1956 இல் யான் கருதியது இன்று உருப் பெறுகின்றது. கீதா மண்டபத்தில் நாடோறும் கீதை ஒலி பெருக்கி வைத்து இசை யோடு ஓதப் பெறுவதுபோல் திருவள்ளுவர் மண்டபத்தில் நாடோறும் ஒலி பெருக்கி வைத்துத் திருக்குறள் பாக்கள் இசையோடு ஓதப் பெறுதல் வேண்டுமென்று மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் கவனத்துக்குக் கொண்டு வருகின்றேன்.

முன்னர்ப் பூம்புகார் கலைக்கூடம், கட்டபொம்மன்கோட்டை ஆகிய கலைப்பணிகளையும் செய்து தமிழகக் கலையினையும், வரலாற்றினையும் பேணிக்காக்கும் கலைஞர் வாழ்க என வாழ்த்துகிறேன்.

## 'சைனரின் தமிழிலக்கண நன்கொடை'
## நூல் வெளியீட்டு விழா



14-9-74இல் மாவட்ட மைய நூலகச் சொற்பொழிவு அரங்கில் சைன இளைஞர் மன்றத்தின் சார்பில், திரு. க. ப. அறவாணன் M. A., M. Litt அவர்கள் இயற்றிய "சைனரின் தமிழிலக்கண நன்கொடை" என்னும் நூல் வெளியீட்டு விழா ஜினகாஞ்சி மடாதிபதி ஸ்வஸ்தி ஸ்ரீ லட்சுமி தலைமையில் நடைபெற்றது. சேனபட்டாரக பட்டாச்சார்யவர்ய சுவாமிகள், மகாவித்துவான் மே. வீ. வேணு கோபாலப்பிள்ளை, திரு வே. தில்லைநாயகம், பேராசிரியர் கொண்டல் சு. மகாதேவன், மயிலை சீனி வேங்கடசாமி, சிலம்பொலி செல்லப்பன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர்.

அடுத்து நூலாசிரியர் திரு. க. ப. அறவாணனார் தம்மை வாழ்த்திய பெருமக்களுக்கு நன்றிகூறி நூலை வெளியிடத் துணையாயிருந்த சைன இளைஞர் மன்றத்தாரைப் பாராட்டினார்.

விழாவில் சைன இளைஞர் மன்றத்தின் சார்பில் அறமிகு அடிகளார் நல்லாசி கூறி, நூலாசிரியர் திரு. க. ப. அறவாணனார்க்கு மன்றத்தினர் காட்டும் அன்பின் அடையாளமாக நாடாப் பதிவுப் பொறி (Tape Recorder) ஒன்றை அளித்தனர்.

விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் விழாத் தொடக்கத்தில் சைன இளைஞர் மன்றத் தலைவர் திரு. சம்பத்குமார் வரவேற்றார்.

---

# திருவாசகமணி திருவடிப்பேறெய்தினர்

புகழ்பெற்ற தமிழ்ப் பேரறிஞரும், ஆங்கிலமும் தமிழும் பாங்குறப் பேசவும் எழுதவும் கவிதைகள் புனையவும் வல்லவரும் சிறந்த சைவ சமயப் பற்றுளருமான திருவாசக மணி திரு. கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்கள் 3-10-74இல் திருச்சிராப்பள்ளியில் திருவடிப்பேறெய்தினர்கள் என்ற செய்தியறிந்து பெரிதும் வருந்துகிறோம்.



திரு. கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்கள் திருவாசகம், திருக்குறள் ஆகியவற்றை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். திருவாசகத்தில் இவர் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்த காரணத்தால் 'திருவாசகமணி' என்னும் சிறப்புப் பெயரினைப் பெற்றார்.

'மாணிக்கவாசகர் அந்தாதி' என்னும் கவிதை நூல் ஒன்றினை இயற்றியுள்ளார். அஃது அவரது கவிதை புனையும் ஆற்றலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. அண்மையில் தொழிற் செல்வர் தமிழவேள் நா. மகாலிங்கம் அவர்கள் விரும்பியபடி பெரிய புராணத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வந்தார். அப்பணி முற்றுப்பெரு முன்னர் அவர் இறையடி சேர்ந்தமை வருந்தத்தக்கது.

தமிழகத்தில் மட்டுமின்றி, தென்னாப்பிரிக்கா, மலேயா, இலங்கை முதலிய அயல்நாடுகட்கும் சென்று அங்கெல்லாம் சைவ சமய உண்மைகளைப் பரப்பி வந்தார். சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர். துவக்க காலத்தில் நீதிக் (ஜஸ்டிஸ்) கட்சி சுயமரியாதை இயக்கம் ஆகிய வற்றில் பெரும் பங்கு கொண்டிருந்த போதிலும், பிற்காலத்தில் தமிழுக்கும் சமயத்துக்கும் தொண்டு செய்வதே தமது குறிக்கோளாகக் கொண்டார்.

கழக வெளியீடுகளை அவர்கள் எப்பொழுதும் உளமாரப் பாராட்டி வரவேற்பார்கள். அண்மையில் வெளியிடப்பெற்ற 'திருவாசகம் நீத்தல் விண்ணப்பம்' என்ற அரிய சமய நூலுக்கு அவர்கள் அளித்த அணிந்துரையில் ஒரு பகுதி ஈண்டு தரப்பட்டுள்ளது:

> "I must congratulate the Saiva Siddhanta works Publishing Society on having come forward to publish such a priceless booklet on a peerless subject in keeping with their unique tradition of publishing, only and all the highest and best books in Tamil. They are the monarch of publications."

இத்தகைய நல்லாரின் பிரிவால் வருந்தும் அவர்தம் குடும்பத்தினர்க்கும் உற்றார் உறவினர்க்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

# செய்திகளும் குறிப்புகளும்

## "Karunanidhi: Man of Destiny"
## (செயல் வீரர் கருணாநிதி) நூல் வெளியீட்டு விழா

திரு எஸ். சாமிநாதன் அவர்களால் எழுதப்பெற்று "Affiliated East West Press (P) Limited" என்னும் பதிப்பாளரால் வெளியிடப் பெற்றுள்ள 'செயல்வீரர் கருணாநிதி' என்னும் நூல் வெளியீட்டு விழா கடந்த 11-9-74இல் சென்னைக் கலைவாணர் அரங்கத்தில், நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் க. அன்பழகன் அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது. நூலினை டாக்டர் இராசா சர் முத்தையா செட்டியாரவர்கள் தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் கருணாநிதி அவர்களிடம் வழங்கிச் சிறப்புரையாற்றினார். திரு. கே. எஸ். பத்மநாபன் அவர்கள் நன்றி கூறினார்.

## சீறாப்புராணம் வெளியீட்டு விழா

சென்னைத் திரியம் பிரிண்டர்ஸார் பதிப்பித்துள்ள சீறாப்புராணம் வெளியீட்டு விழா 12-9-74இல், சென்னைப் புதுக் கல்லூரி அப்துல் ஷுக்கூர் அரங்கத்தில் நடைபெற்றது. நீதிபதி எம். எம். இஸ்மாயில், மாண்புமிகு அமைச்சர் சாதிக்பாட்சா, ஏ. கே. ஏ. அப்துல் சமத். மறைமலையடிகள் நூல்நிலயக் காவலர் திரு. இரா. முத்துக் குமாரசாமி, எம். ஏ., பி. லிப்., கவிஞர் கா. மு. ஷெரீப், மணவை முஸ்தபா, திரு ஏ. கே. ரிபாயி, ஏ. ஏ. ரஷீத் ஆகியோர் சிறப்புரை ஆற்றினர். திரு. அப்துல் வகாப் விழாவிற்குத் தலைமை தாங்கினார். இவ்விழாவில் "இஸ்லாமிய இலக்கியச் சிந்தனை" என்னும் நூலும் வெளியிடப் பெற்றது.

## இராமலிங்க வள்ளலார் சித்தி நூற்றாண்டு விழா

28-9-74 முதல் 6-10-74 முடிய ஒன்பது நாள்கள், மயிலை இராசேசுவரி திருமண மண்டபத்தில், இராமலிங்கர் நற்பணி மன்றத்தின் சார்பில், இராமலிங்க வள்ளலார் சித்தி நூற்றாண்டு விழாவும். காந்தியடிகள் பிறந்தநாள் பெருவிழாவும் ஒருங்கிணைந்து சிறப்புற நடைபெற்றன. தொழிலதிபர் திரு.நா.மகாலிங்கம் அவர்கள் முன்னின்று நடத்திய இவ்விழாவினைத் தமிழக ஆளுநர் மேதகு கே. கே. ஷா அவர்கள் தொடங்கி வைத்தார்கள். இவ்விழாவினையொட்டிக் கவியரங்கம், கருத்தரங்கம், இசையரங்கு முதலியனவும் சிறப்புற நடைபெற்றன. இசையரங்கில் குருவாயூர் பொன்னம்மாள் அவர்களின் இசை அரங்கு நல்ல அருட்பாடல்கள் நிறைந்த பேரின்ப இசையரங்காக அமைந்திருந்தது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

விழாவில் தமிழறிஞர்கள் பலர் அரிய சொற்பொழிவுகள் ஆற்றினர். இறுதி நாளாகிய 6-10-74 அன்று மாலை, தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் தலைமை தாங்கி அரிய உரையாற்றி வள்ளல் ந. மகாலிங்கம் அவர்கட்குத் தமிழ் நாட்டு நல்வழி நிலையச் சார்பில் 'தமிழவேள்' என்னுஞ் சிறப்புப் பட்டத்தை வழங்கினார்.

## தமிழவேள் திரு. பி. டி. இராசன் மறைவு

முன்னாள் தமிழக அமைச்சரும், நீதிக்கட்சித் தலைவர்களுள் ஒருவரும், தமிழ், தமிழகம், தமிழினப் பற்றாளருமான தமிழவேள் உயர்திரு பி. டி. இராசன் அவர்கள் 25-9-74இல் தமது 83ஆம் அகவையில் மதுரையில் காலமானார்கள் என்ற செய்தியறிந்து பெரிதும் வருந்துகிறோம்.

திரு. இராசன் அவர்கள் கல்வி அறிவு ஒழுக்கங்களிலும், பொது வாழ்விலும் சிறந்து பண்பாளர் எனப் புகழ்பெற்று விளங்கிய பெருந்தகையாளர். 'ஜஸ்டிஸ் கட்சி' என்னும் நீதிக்கட்சியின் தலைவர்களுள் ஒருவராகவுமிருந்து தமிழர் நலம் நாடி, அதனை அழியவிடாமற் பாதுகாத்து அரசியலில் பல நற்பணிகள் ஆற்றியவர்.

இவர் சிறந்த கடவுட் பற்றாளர். பல திருக்கோயில் திருப்பணிகளைத் தாமே முன்னின்று நடத்தியுள்ளார். மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்கு நூறாயிரக் கணக்கில் பொருள் திரட்டி அக்கோயில் திருப்பணியினைச் செய்தார். மேலும் வடபழனியாண்டவர் கோயில், கோலாலம்பூர் மாரியம்மன் கோயில் ஆகியவற்றின் திருப்பணிகளையும் செய்துள்ளார்.

தமிழ் அறிஞர்களிடத்தில் இவருக்கு மிக்க பற்றுண்டு. தமிழ் நூல்களைச் செவ்வனே பதிப்பிக்கும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக ஆட்சியாளர் அவர்களிடம் மிக்க அன்பும் நன்மதிப்பும் வைத்திருந்தார். கழகச் சார்பில் முப்பெரும் புலவர்கள் நினைவு விழா 20-2-72இல் மதுரையில் நடைபெற்றபோது அவ்விழாவிற்குத் தலைமைதாங்கிச் சிறப்பித்தார். மறைமலையடிகள் நூல் நிலையத்திற்கு வந்து பார்வையிட்டுப் பாராட்டியுள்ளார். தணிகைமணி அவர்கட்கு மதுரைப் பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கிய அன்று மாலை திருவள்ளுவர் கழகத்தின் சார்பில் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில் தணிகைமணியவர்கட்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்.

இத்தகைய தமிழன்பராகவும், புரவலராகவும், பண்பாளராகவும் விளங்கிய திரு. பி. டி. இராசன் அவர்களின் மறைவு தமிழகத்திற்குப் பேரிழப்பாகும். இவர்தம் பிரிவால் வருந்தும் இவருடைய குடும்பத்தினர்க்கும், உற்றார் உறவினர் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## தமிழ்க் கடல் "ராய. சொ" பேராவியற்கை

புகழ்பெற்ற தமிழறிஞரும், சிவபத்தரும், தமிழ்க்கடல் எனப் பட்டம் பெற்றவரும், சிறந்த எழுத்தாளருமான "ராய. சொ" என்னும் சிறப்புப் பெயர் பூண்ட திரு. ராய சொக்கலிங்கம் அவர்கள் 30-9-74இல் தமது 76ஆம் அகவையில் காலமானார்கள் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம். திரு. ராய. சொ. அவர்கள் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டவர். காரைக்குடி நகரசபைத் தலைவராகவும் காரைக்குடி அழகப்பா கல்லூரித் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவராகவும், இந்து மதாபிமான சங்கத் தலைவராகவும் இருந்து பல நற்பணிகள் ஆற்றியவர். மறைமலையடிகள் நூல் நிலையத்தைப் பார்வையிட்டுப் பாராட்டியுள்ளனர். மறைந்த ராய. சொ. அவர்களின் குடும்பத்தார்க்கு நமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

## பெரும் பிரிவுகள்

1. கழக நூலாசிரியர்களுள் ஒருவரும், மேலப்பூர் திருமடத்தின் தலைவருமான மாணிக்க வாசக ஞான தேசிக சுவாமிகள் 25—9—75 இல் பிரிவுற்றமையும், 2. நிழற்பட மெடுத்தலில் வல்லுநரும், கழகம் அமைக்கும் நூற்காட்சிகட்குத் தாமே தொகுத்துள்ள திருக்கோவிற் படங்களை மனமுவந்து கொடுத்துதவியவருமான திரு எம். கே. அரங்க சாமி ஐயங்கார் 2—10—74 இல் 89 ஆம் அகவையில் பிரிவுற்றமையும், 3. முன்னாள் நடுவணரசின் பாதுகாப்பு அமைச்சரும் பண்டித நேரு அவர்களின் உற்ற நண்பருமான திரு வி. கே. கிருட்டிண மேனன் 6—10—74இல் பிரிவுற்றமையும், 4. மைசூர் மாமன்னரும், கருநாடகம், தமிழ்நாடு ஆளுநராக இருந்தவருமான மெய்ப் பொருளறிஞர் மாட்சிமை மிகு செயசாம்ராஜ் உடையார் அவர்கள் 23—9—74இல் பிரிவுற்றமையும் மிகவும் வருத்தந் தரக்கூடியனவாகும்.

## டாக்டர் மு. வரதராசனர் பிரிவு

மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் மு. வரதராசனர் 10—10—1974 மாலை 5-30 மணிக்குச் சென்னை, பொது மருத்துவமனை யில் நெஞ்சுப்பைக் கோளாறினல் இறையடி சேர்ந்த செய்தி தெரிந்து ஆற்றெணுத் துயர மடைகின்றேம். இளமை முதலே இயற்கை மருத்துவத்தைக் கடைப்பிடித்து வந்தவர். பரபரப்பின்றி எதனையும் ஆற அமர அமைதியாகவே செய்து வருபவர். அவர்கட்கு நெஞ்சுப்பைக் கோளாறினல் பிரிவு ஏற்பட்ட தென்பதை நம்பக்கூடவில்லை. அவர் தம் மக்கள் மூவரும் ஆங்கில மருத்துவத்தில் பட்டம் பெற்றவர்களாவர். டாக்டர் மு. வ. எளிய இனிய செந்தமிழ் நடையில் பல நூல்களை எழுதிப் புகழ் பெற்றவர்களாவர். கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்ப் பேசுந் திறனினர். மொழி நூல், மொழி வரலாறு, கரித்துண்டு, அல்லி, அகல் விளக்கு, சில கடித நூல்கள் முதலிய பல நூல்களை எழுதிப் புகழ் எய்தியவர்களெனினும் தமிழகத்தில் எந்த ஒரு தமிழ் நூலும் விற்காத அளவுக்குக் கழகம் வெளியிட்ட 'திருக்குறள் தெளிவுரை' எட்டு நூறுயிரம் படிகள் வரை விற்கப் பெற்று டாக்டர் மு. வ. அவர்கட்கு அழியாப் பெரும் புகழை ஈட்டித் தந்துள்ளது. அவர்கள் பெயரால் கழகம் நிறுவியுள்ள திருக்குறள் பரிசுத் திட்டமும் அதனல் வெளிவரும் ஆராய்ச்சி நூல்களும் டாக்டர் மு. வ. அவர்கட்குத் தமிழுள்ளளவும் புகழ் தரும் என்பதில் ஐயமில்லை. தமிழ் மக்கள் செய்த தவப்பயனுய்த் தோன்றிப் புகழோடு மறைந்த டாக்டர் மு. வ. அவர்கள் ஆருயிர் இறவா இன்ப அன்பு பெற்றுக் கூத்தப் பெருமான் கழலடியில் அமர்கவென வேண்டுவோம்.



---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்திற்காக
சென்னை-600001, 2-140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

**மாறனலங்காரம் - மூலமும் உரையும்**

பதிப்பாசிரியர் : புலவர் இரா. இளங்குமரன்

இந்நூல் மாறன் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற நம்மாழ்வாரைத் தலைவராகக் கொண்டு திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பவரால் இயற்றப் பெற்ற ஓர் அணியிலக்கண நூல். இதில் பொருளணி இயலில் உள்ள முதல் பதினைந்து அணிகளை மதுரைப் பல்கலைக் கழகத்தார் புலவர் இறுதித் தேர்வுக்குப் பாடமாக வைத்துள்ளனர். இலக்கணப் புலமைமிக்க புலவர் இளங்குமரன் அவர்கள் மாணவர் விரும்பிப் பயிலும் வகையில் பதிப்பித்துள்ளார். ரூ. 6-25

**அப்பர் அருளிச் செய்த திருத்தாண்டகம்**

(ஆறுந்திருமுறை)

பொழிப்புரை, குறிப்புரை :

பண்டிதவித்துவான் கு. சுந்தரமூர்த்தி

அப்பர் தேவாரம் - ஆறுந்திருமுறையுள் முதல் பத்துப் பதிகங்கள் சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் இறுதிநிலைத் தேர்வுக்குப் பாடமாக வைக்கப்பட்டுள்ளன. அவற்றுக்கு மாணவர்கள் விருபபிக் கற்கும் வகையில் பொழிப்புரையும் குறிப்புரையும் வரைந்துள்ளார் சைவப் புலவர் சித்தாந்த நன்மணி, பண்டித வித்துவான் கு. சுந்தரமூர்த்தியவர்கள்.
ரூ. 3 - 25

**கல்லாடம் உரை (முதல் 30 செய்யுள்கள் மட்டும்)**
—உரை : புலவர் பொ. வே. சோமசுந்தரனர் 12 50

**திருவாசகம் நீத்தல்–விண்ணப்பம் உரை**
—புலவர் ந. ரா. முருகவேள், எம்.ஏ, பி.ஓ.எல். 4 00
(கல்லாடம் சென்னைப் பல்கலைக் கழகத்தின் முதனிலைக்கும் நீத்தல் விண்ணப்பம் இறுதி நிலைக்கும் பாடமாக உள்ளன.)

**கம்ப நாடர்**
பேராசிரியர் தி. செல்வக்கேசவராயமுதலியார் எம்.ஏ. 3 00

**மதுரை இருபெரும் புலவர்கள்**
(மாம்பழக்கவிச் சிங்க நாவலரும் கந்தசாமியாரும்)
—புலவர் இரா. இளங்குமரன் 4 00

## பிற பதிப்பாளரின் வெளியீடுகள்

South Indian Images of Gods & Godesses 60 00
Sakti Cult In Ancient India 68 00

**வாழ்க்கை வரலாற்று இலக்கியம்**
—டாக்டர் சாலினி இளந்திரையன் 10 00

**கொளஞ்சியப்பர் பிள்ளைத் தமிழ்**
—தவத்திரு தி. செ. முருகதாச சுவாமிகள் 3 00

